" His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks. "—See Wrapper p. 3.

REGISTERED—M. 108.

Vol. XVIII.] AUGUST 1910. [No. 5.

லேசான காகிதப் பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 அணா.

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரூ. 4.
ஆறு மாதத்திற்கு ,, 2-2.




*Devoted to practical Truth and Knowledge.*

அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்:-திருக்குறள்.

A Popular New Review
And Tamil Monthly,
Estd. May, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக : திருக்குறள்.

Illustrating the Principles of Education, Psychology, Soul-Culture & Ethics.

*Adapted for Use in Homes & Schools.*

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

CONTENTS. Page.



அட்டவணை. பக்கம்.



["Our Theism is the Purification of the Human Mind"—Emerson.]

Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

**The Secretary, Diffusion of Knowledge Agency,**

*Lalitalaya, Mylapore, Madras, S.*

*For The Viveka Chintamani Publishing Committee.*

Thin Paper Edition for the People.] *(Copyright Registered)* [Subscription Price: Yearly Rs. 4.

*Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti.*

"The ideals of the Indian people are noble and beautiful—the loftiest in the world. They are spiritual. They are embodied in their ancient religion, that soul-inspiring path to God which has no equal among men."—*Mr. M. H. Phelps.*

"It is only when the whole history and development of the faith are envisaged that we begin to realise what a gigantic task Hinduism essayed and accomplished, and what an exalted place it holds among the religions of the world. Its theory of God and the World, is so serious, bold and far-reaching as to set the religion among the very greatest...The nobility and sombre grandeur of this master-conception are apparent. Faith in the Hindu world-conception has been no dilettante toying with a pretty thought, but has worked itself out in heroic efforts....Yet, fullest acknowledgment being made of the gross hypocricy, idleness, immorality and uselessness of vast numbers of yogis, we are still face to face with the grandeur of the Ideal, the simple honesty of multitudes of good men and the heroic achievements of leaders."—*Mr. J. N. Farquhar of the Y. M. C. A., Calcutta,* on "the Greatness of Hinduism," in the *Contemporary Review.*

## லக்ஷிய லக்ஷணம்.

இலக்ஷியமென்று லென்ன? அதன் இலக்ஷணமென்ன? "இலக்கியங்கண்டதற்கிலக்கணமியம்பலிற், பகுதி விகுதி பகுத்திடைநின்றதை, வினைக்குறிப்பிடைநிலை யென்னல்வேண்டும்" என்னும் பதவியல் சூத்திரத்தைக்கொண்டே யிதற்கு லக்ஷணங்கூறுவோம். முற்காலத்திற் கண்டதாகிய லக்ஷியத்திற்கு லக்ஷணம் சொல்வதில் ஆதியாய் நின்ற பகுதிவர்க்க தத்துவனையும், இறுதியாய் நின்ற விகுதிவர்க்க தத்துவத்தையும் "பகுத்து"க் காட்டி, "இடைநின்றதை" "வினைக்குறிப்பிடைநிலை யென்னல் வேண்டும்." அப்படியே, "இலக்கு" அல்லது "குறி" பகுதி, "அம்" விகுதி; "இய" இயங்குதற்றொழிலைக்குறிக்கும் "வினைக்குறிப்பிடைநிலை." 'இலக்ஷியம்' என்றால் ஒன்றில் இலக்கு அல்லது குறிவைத்திருந்து அது சித்திக்கும் வரையில் முயலுதலாம் "இயக்கமியற்றி" அது சித்தித்தவிடத்துத் திருப்தியுறலாம் "பூரணமிருதம் பருகுதலில்" இறுதியல்லது முடிவையடையும் ஓர் ஆத்மசங்கல்பத்தைக் குறிக்கும். இது "இலக்ஷியம்" என்னும் பதத்துக்கு இலக்ஷணமாம். இலக்கிய இலக்கணமிரண்டும் அவயவ அவயவிபோல் ஒன்றுக்கொன்று வேறுபடாது அபேதமா யமைந்துள்ளது.

மனிதன் ஒன்றை அறிவதற்கு அறிவே காரணமாயிருந்தாலும், கருவிகரணங்களின்றி அவன் தனக்கு அந்நியமாயுள்ள எதையும் அறியக்கூடாதவனாயிருக்கிறான். "Man sees as he is" என்றார் எமர்ஸன் தத்துவஞானி. "மனிதன் தானிருப்பது போலவே தனக்கு அந்நியமானதை உணர்கிறானாயினும், கருவிகரணங்களின் சாதனமின்றி இது சாத்தியமில்லையாம். "கள்ளனுக்குத்தோன்றும் திருட்டுப் புத்தி." "ஞானிக்குத்தெரியும் ஞானியின்லக்ஷணம்." இவை போன்ற பழமொழிகளெல்லாம் எமர்ஸன் சொல்லிய உண்மையையே உணர்த்துவனவாகும். ஏன் இப்படி யென்றால், இந்த நாமரூப பேதப்பிரபஞ்சங்களெல்லாம் துவைதபாவத்தாலும் பேதபுத்தியாலும் "ஏகமேவாத்விதீயம்" என்ற ஏகமான அத்துவிதப் பொருளிலிருந்து உண்டாயினவா யிருப்பதாலே யென்று அறிக.

"ஏகமான இரண்டற்ற அத்துவிதப்பொருள்" என்றது எங்கும் நிறைந்து பரிபூரணமாயுள்ள வஸ்து ஒன்றையே குறிக்கும். அது,

"காட்டேக்குறியுங் கடந்தவர்காரணம்
எட்டின் புறத்திலெழுதிவைத்தென்பயன்!"

என்ற திருமந்திரோபதேசத்தாலே வாக்குக்கும் மனதுக்கு மெட்டாததென்று ஏற்படும். அதைக் "கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்." ஏன் கண்டவர் விண்டிலர் எனில், அந்தப் பரிபூரண வஸ்துவை சாக்ஷாத்காரத்தாலே மட்டும் காணலாம். அப்படிசாக்ஷாத்கரித்தவர் அப்பிளுப்புப்போல் அதிலீடுபட்டு அதன்மயமே யாகிவிடுகிறார்களாதலால், அதைச்சொல்ல ஆளில்லாமற் போகிறது. ஆயினுமதைச்சொல்லாமற்சொல்லி சுட்டாமற்சுட்டலாம். இந்த சாமர்த்தியமுள்ளவர்களை "உரையற்ற தொன்றை உரைசெய்யும் ஊமர்காள்" என்று திருமூலர் விளித்துரைசெய்திருக்கிறார்.

"உரையற்றதொன்றை யுரைசெய்யமூமர்காள்
கரையற்றதொன்றைக் கரைகாணலாகுமோ!
திரையற்ற நீர்போல் சிந்தை தெளிந்தார்க்குப்
புரையற்றிருந்தான் புரிசடையோனே!"

என்பது அவருடைய பூரணமான திருமந்திரோபதேசம். இப்படிக் கரையற்றுத் திரையற்று 'அறிவான், அறிபொருள்' என்கிறபேதமற்றுப் பிரிவற்று நின்றதொன்றெதுவோ அதுவே பூரணலக்ஷியமாம். அந்த ஒரு லக்ஷியத்தில் எல்லா லக்ஷியங்களும் பொருந்தப் பொருந்தி நிற்கும். இந்த லக்ஷியத்தையறிந்தவர் நித்தியகுண கலியாணராய், நிர்மலராய், நிஷ்களராய், நித்தமுக்தராய், துவந்துவமற்றவராய், தானேதானாய், ஜகமெங்கும் தன்மயமன்றி வேறிலாத வேற்றுமையற்றவராய் விளங்குவர். இவர் ஏகமாயும் அநேகமாயும், பிரஹ்மமாயும் (ஸர்வாந்தர்யாமியாயும்), பிரபஞ்சமாயும் (நாமரூபத்தோற்றமாயும்) விளங்குவர். விளங்கியும் விசித்ராகாரமற்று அகண்டாகாரமாய்த் தானே தன்மயத்திலீடுபட்டு நிற்பர். இவர்கள் இப்படி நிற்பதற்குச்சாதகமாயிருப்பது இவர்களுடைய அகண்டலக்ஷியமாம்.

"திரையற்ற நீர்போல் சிந்தை தெளிந்தால்" அது "கரையற்றதொன்றோடு" அப்பிளுப்புப்போல் கரைந்தேபோய்விடும். அந்த சிந்தையானது "திரையற்ற நீர்போல்" தெளியாது, சலனப்பட்டுக் கொண்டிருந்தால் அஃது சகலரூபமான சங்கல்பவிகல்ப அலைகள் நிறைந்திருக்கும். இந்த சங்கல்பவிகல்ப அலைகளும் அதிலிருந்து சிதறுண்ட நீர்த்திவலைகளுமே நாமரூபப்பிரபஞ்சமாகத் தோற்றுவது. இப்படிப்பட்ட நாமரூபப்பிரபஞ்சமான தோற்றம் அறிவிற்பட கருவிகரணங்கள் இன்றியமையாதனவாம். கருவியென்பது ஞானேந்திரிய கர்மேந்திரியங்களான பத்துக்களுடனே இவற்றின் சமஷ்டிரூப மனதை ஒரு இந்திரியமாகவைத்துக்கூட்டி ஆகப்பதினொன்று என்றுசொல்வர். இப்பதினொன்றையும் சமுத்திரத்தில் தோன்றும் அலைகள் போல் இயங்கச்செய்வது பஞ்சப்பிராணன்களும் அவற்றின் சமஷ்டிரூப வாயுவுமாம். மேலேசொன்ன இந்திரியங்களுக்கெல்லாம் சமஷ்டிரூபமாயும் உற்பத்திகாரணமாயுமிருக்கிற மனசு, இயக்கத்துக்கெல்லாம் காரணமாயிருக்கிற வாயுவோடு ஐக்கியப்பட்டால் விருத்திமார்க்கத்தில் தீர்க்கதிருஷ்டியும், நிவிர்த்திமார்க்கத்தில் தீர்க்கதரிசத்துவமும் உண்டாகும். "வாயுமேன் வார்த்தையேன் வாயுமனமொன்றுமேல்" என்பது பெரியோர் மேற்கோள். "வாயுமனம் ஒன்றுமேல்" கேவலகும்பகத்தில் ஒன்றுபட்ட அந்த ஜோதிர்மனம் தன் சங்கல்பமாத்திரத்தாலே "சிருஷ்டிஸ்திதிவியஸனகர்மக்ருத்" என்ற சுருதிவாக்கியப்படி, ஸ்தூல, சூக்ஷ்ம, காரணமாகத் தோற்றும் மூவிதத் தோற்றங்களைச் சிருஷ்டித்து (உண்டுபண்ணி)க், காப்பாற்றி, யழித்து முன்போல் தன்னில் லயமாகச்செய்யும் சக்தியுள்ளது. இந்தச் சக்தியுள்ளவனே மன்குலதிலகன். இவனே மனுபுத்திரன். இவனே முனிபுங்கவன். இவன் தன்னுடையசங்கல்பசக்தியால் மேன்மேலும்

அழகு பொருந்த மன்மதசிருஷ்டிகளைச்சிருஷ்டிக்கிறான். "அகத்தழகு முகத்தில் தெரியும்" என்பதாய் இவன் அகமுகத்தில் அழகுபொருந்திய உருவங்களைச் சிருஷ்டித்துவருவது இவன் முகத்தில் "களை" யென்றுசொல்லும் தேஜஸ்ரூபமாய் விளங்கும். ஸ்தூலத்தில் சிருஷ்டித்துப் பார்த்துப்பார்த்து மன்மதரூபத்துக்கு பிருதிவியாதி ஸ்தூலபூதங்கள் போதுமான ஸன்னம் பொருந்தியவையாகவில்லை யென்று அவைகளையெல்லாம் விட்டுப் பஞ்சபூதங்களையும் அவற்றின் காரணமான சூக்ஷ்மபூதங்களில் அஷ்டாங்கயோகத்தால்அடைத்து லயிக்கச் செய்கிறான். இதனால் இவனுடைய ஸ்தூலதேகமும் நழுவிப்போகப்புரியஷ்டகத்தை(சூக்ஷ்மதேஹத்தை)க்கொண்டு மந்திரசிருஷ்டிகளான தேவதைகளைச் சிருஷ்டிக்கிறான். இவைகளும் இவன் அழகு பொருத்துவது முற்றும் பொருந்தாதுபோக, சூக்ஷ்மபூதங்களையெல்லாம் தள்ளி அவைகளை யவற்றின் காரணமான அஹங்கார தத்துவத்திலடைத்து, த்ரிகுணாத்மகமான அஹம்பாவத்தைக்கொண்டு பூரணவழகும் பொருத்தப்பொருந்தும் உருவத்தை (சகுணவடிவை) யுண்டுபண்ணிப் பார்க்கிறான். இப்பொழுது கருவிகரணங்களை விட்டு இச்சாசக்தி,ஞானசக்தி,கிரியாசக்தியென்னும்மூன்று சக்திகளைக்கொண்டு தன்னுள்ளத்திற் பொருந்திய பூரண அழகுள்ள உருவை உருப்படுத்திப் பார்க்கிறான். குறியும் குணமும் பொருந்த திரிகுணமும் சமனானபொழுது திரிகுணாதீதமான ஒரு அருவுரு (உருவில்லாத வுருவாம் சகள-நிஷ்களரூபம்) இவன் அறிவிற்கு அறிவாய்த் தோற்றுகின்றது.

அதையே அழகு பொருந்திய அழகுருவமாகக் கண்டு "யாரே அழகுக்கு அழகுசெய்வார்?" என்ற மேலோர் மூதுரையினால் விவேகமுற்றவனாகி (சத்திநிபாதமான அத்தன்மையில்) இதுவரையில் தான் சிருஷ்டி ஸ்திதிலயரூபமான கிருத்தியம் செய்து வந்ததெல்லாம் நித்தியமாய் நிர்மலமா யுள்ள அழகைக் கெடுத்து அதன் சுந்தராகாரத்தை விகாரப்படுத்தினதன்றி, அதன் அழகு விருத்தியாகச் செய்ததில்லை யென்று கண்டுணர்ந்து, தான் இதுகாறும் செய்த வேலையெல்லாம் (சங்கற்பரூப கர்மாவெல்லாம்)வீணுக்குச்செய்த வெட்டிவேலையென் றுள்ளுணர்ந்து கண்டு, சங்கற்ப-விகற்ப வாசனைபடிந்த மனதைச் சித்தவிருத்தியின்றி நிரோதனம் செய்து "திரையற்ற நீர்போல் சிந்தைதெளியச்" செய்வதே தான் செய்யத்தக்க மஹத்தான வேலையென்றுணர்ந்து, "அப்ராப்த ப்ராபணம்யோகঃ க்ஷேமொ லப்தஸ்யபாலநம்" என்ற யோக-க்ஷேம சாதனங்களை யப்பியஸித்துக் கிரமேண (படிப்படியாக) சித்தவிருத்திநிரோதனஞ் செய்து "அலையு மனத்தையகத்தடக்கும்" அதீத சக்திவாய்ந்த யோகதற்பரனாய், மனம் நழுவின விடத்தில் திரிகுணாதீதமாய் நின்ற குறியைத் தான் கண்டது கண்டபடி நித்தமாய், நிர்மல சித்தனாய் அதைக் கண்டு களிக்கும் படியான "ஞானியதிசூரன்" ஆகிறான். மேலே குறிப்பிட்டுக் காட்டியதோர் பெறுதற் கரிய பேறும் உன்மனி யவஸ்தையில் அந்தர்லக்ஷியத்தைக் கண்டு அதன் அழகில் ஈடுபட்ட ஆத்மன் (அசங்கனாய் "அறிவுரு" மாத்திரமாய் மிஞ்சி நின்ற ஜீவன்) அதிலிருந்து பழகப்பழக அப்பியாஸ முதிர்ச்சியில் தன்சொரூபத்தைக் கண்டு களித்து நிரதிசயானந்தனாகி, மன்மதரூபனான தான் பஞ்சதசாக்ஷரீ மந்திரதிருஷ்டாவாகி, அம்மஹாமந்திரத்தின் அதிதேவதையும் "ஸர்வகாரண பூதாசக்தி" யுமான (ஸ்வாத்மானந்த பூரணமான) லளிதாபரதேவதையைக் கண்டு "ஸ்ரீகுரு" வென்று சரண் அடைந்து அவளுடைய கிருபாகடாக்ஷபூரணத்தால் "அகண்டலக்ஷ்யானந்தம்" பெற்று கிருதார்த்தனாகிறான். இதுவே லக்ஷியங் கண்டதற்கு லக்ஷணம். மற்றவையெல்லாம் அவலக்ஷணமான விலக்ஷணமே!

ஓம் முனிமானஸஹம்ஸிகாயைநமঃ |

# "What is Truth?" or "Sri Guru?"

" Beauty is truth, truth beauty—that is all
Ye know on earth, and all ye need to know."—*Keats.*

## "ஸ்ரீகுரு" என்றால் என்ன?

"ஸ்ரீகுரு: ஸர்வகாரண பூதாசக்தி:"— பாவனோபநிஷத்.

[மாயாண்டிச்சித்தன் ஞானப்பாட்டு.]

" *வினைகடிந்தாருள்ளத்துள்ளொளிமேவித்*
*தனையடைந்தார்க்கெல்லாந்தத்துவமாய்நிற்பன்*
*எனையடிமைகொண்டவேந்திழையீசன்*
*கனைவனைக்காணவனுதியுமாமே."*—திருமந்திரம்.

1. *குருதரிசனத்துக் காசைப்பட்டதுணர்த்தல்.*

(1) " ஸ்ரீகுரு" வென்ப தோர் ஸ்ருதிநாமம் *
" ஸர்வ காரண பூதா சக்தியது:"
ஸ்ரீகுரு வாமந்தத் திருநாமந் தன்னை
ஸ்வகார்ய மாகவே தேடினே னன்.

2. *ஸ்வகார்யசித்தருக்கு குருதரிசனம் கிடைப்பது துர்லபமென்பதுணர்த்தல்.*

(2) தேடித் தேடி யலுத்தே னம்மா!
பாடிப் பாடி யழுதே னம்மா!
ஆடிப் பாடி யழுதுந் தேடியுந்
தேடிய "ஸ்ரீகுரு" தென்படக் காணேன்!

3. *இந்திரிய நிக்கிரகத்தாலன்றி வேறுவழியில்லையென்ப துரைத்தல்.*

(3) காணேன் "ஸ்ரீகுரு" நாமந் தன்னை
காணவோ வழியொன்றுந் தோற்ற வில்லை:
காணவே .காரிய மாவுலகில் லதைக்
கண்மூடி யானுந் தபவிருந் தேன்!

4. *இந்திரிய நிக்கிரகமும் தீக்ஷார்த்தமாகவேயன்றி வேறல்லவென்ப துணர்த்தல்.*

(4) தபவிருந் தேன்வெகு கால மதாய்
தபவிருந் தேயூன் உணவொழித் தேன்!
தபவிருந் தேயான் காரிய வுலகில்
"தபஸ்வி" யென்றொரு பேரெடுத் தேன்.

---

* 'ஸ்ருதிநாமம்' என்றாலும் ஸ்வராந்தம், என்றாலும் மந்திரதிருஷ்டி யில் ஒன்றே. 'மறைநாமம்' என்றும் பாடமுண்டு. அப்பொழுது இரகஸியநாமம் என்பது பொருள். இருட்டைப்போக்கும் " காமகலா " என்னும் ஸாதரீக்கியத்தைக் குறிக்கும்.

5. இந்திரிய நிக்கிரகத்தாலும் சமயதீக்ஷையாலும் குருதரிசனம் கிட்டாது என்பதுணர்த்தல்.

(5)
பேரெடுத் தேன்பெருந் தபஸ்வி யென்றே
ஊரெடுத் தேயுருத் தான்ஜபித் தேன் †
பேரெடுத் தூரெடுத் துலகெடுத் தேன் †
பேரிலா "ஸ்ரீகுரு" நாமங் காணேன்.

6. பிராணாயாமத்தாலே இந்திரியநிக்ரகம் செய்தவர் பிரத்தியாஹாரத்தாலே தாரணைசாதிக்க வேண்டுமெனல்.

(6)
நாமங் காணே னுன்னே காமங்கண்டேன்
‡ காமங் கண்டே யதன் நேமங்கண்டேன் ‡
காமத்தி னேமமாங் † காரணங் காணவுங்
காமநே மத்தில் திவ்ய உருக்கண்டேன். †

7. தாரணைசித்தித்ததின்மேல், தியானசாதனமும் அதன்சித்தியு முணர்த்தல்.

(7)
உருக்கண்டே யதன் அழகு கண்டேன்
$ உருக்கொண்ட அழகின் உரு வொழித்தேன்:
உருவொழிந் துருக்கொண்ட அழகு கண்டேன்:
உருவரு வாமதன் மூலங் கண்டேன் !

8. தியானசித்திக்குப் பின் சமாதிசாதனையும் அதன் சித்தியுங்கூறல்.

(8)
மூலங்கண்டே யதன் சொரூபங் கண்டேன்
$ மூலத்தில் அருவாம் உருக் கண்டேன்
மூலத்தில் அருவுருக் கண்ட நானே
¶ மூலத்தில் உருவரு வாகி நின்றேன்.

9 தாரணத்தியானசமாதியான யோகசம்யமத்தில் சித்தித்த குருமூர்த்த முணர்த்தல்.

(9)
உருவரு வாகியும் அருவுரு வாகியும் ††
அருவுரு வில்லுரு அருவா யுந்தான்
அருவே யுருவும் உருவே யருவுமாத்
திருவுரு வானது "ஸ்ரீகுரு" வாம்.

(5) † Compare: "உருவிலாகும் சித்தியெல்லாம் உலகத்தோர்க்கே, அருவிலாகும் சித்தியதே யளிக்கும் முத்தி." Name, fame & world-wide reputation as *tapasvi* availed not.

(6) ‡ காமம்=ஆசை,விஷயப்பற்றுள்ள மனம். அதன் நியமம் காமஸங்கல்ப ரூப அசுத்தமனம்; † ஆசைக்கிருப்பிடம் சங்கல்பமாத்ரத்துவனி; அந்த துவனிக்குள் தேஜோமயஜ்யோதியும், அந்தஜ்யோதிக்குள் சுத்த சங்கல்பமனமும் இருக்கிறது. "திவ்யவுரு"=தேஜோமனம்.

(7) $ தேஜோமனத்தின் உருவொழிந்தால் அது மனோலயம் ஆகிற பிந்துவாம். இதற்கு நுபநாசம் அல்லது உநவநாசம் என்றும் "ஒழிவில்ஒடுக்கம்" என்றும் சொல்வர் மேலோர். உருவிலுரு=மிச்ரபிந்து, உருவிலரு=நாதம். அதன்மூலம்=நாதாந்தம்.

(8) $ மூலத்தில்=மூலகாரணத்தில்; "அருவாம் உரு" அல்லது "அருவுரு" நாதாந்த வெட்டவெளி.
¶ "நாதவடிவாகிய மஹாமந்திராதிரூபியாய்" வித்யாசரீரியாகிநின்றேன்.

(9) †† நாதாந்தவெட்டவெளியாகியும், நாதவடிவான மஹாமந்திராதிரூபியாகியும் என்றபடி.

9-வது பாட்டின் கருத்து ஸௌந்தரியலஹரி முதல் மந்திரத்தில் ஆச்சாரியஸ்வாமிகளால் நன்றாகச் சொல்லப்பட்டிருக்கிறது. உருவருவாகியும்=சக்திசிவமாகியும், அருவுருவாகியும்=சிவ-சக்தியாகியும், (அந்த) சிவசக்தியில் (தோன்றும்) சொரூபம் (சகளமூர்த்தம்) அரூபமாகவும்(நிஷ்களமாகவும்),அரூபம் சொரூபமாக

10. யோகஸம்யமனான சற்சீஷனுக்கும் சற்குருவுக்குமுள்ள ஸ்வாகர்ஷணரூப காந்தசக்தி யுணர்த்தல்.

(10) “ ஸ்ரீகுரு” வாமந்த சொரூபங் கண்டு
ஸ்ரீகுரு வழகில் மோஹங் கொண்டு ¶
ஸ்ரீகுரு வாமந்த அருவுருத் தன்னில்
ஸ்ரீகுரு மோஹனா யானிருந் தேன்.

11. சற்குரு ஸாந்நித்தியம் சித்திக்கப்பெற்ற சற்சீஷன் சித்தனாதலால் உபதேசத்தை விரும்பானாகி, வாச்சாமஹோசரமான ‘மௌனமந்திராதிக்யவித்யை’யையே விரும்புவான் என்பது கூறல்.

(11) இருந்தே னிருப்பிடந் தானறி யாதே
‡‡ அருந்தேன் ஸ்ரீகுரு தேன் மொழியை!
விருந்தேன் ஸ்ரீகுரு சேவை கண்டேற்கு
மருந்தேன் மாயப் பிணி போக்கவே !

12. சற்குரு ஸாந்நித்திய ஸம்பந்நன் அபக்குவர்களான காமியகர்மிகள் சங்கத்தை யொழித்து நைஷ்கர்மசித்தியிலேயே லக்ஷியமுள்ளவனா யிருப்பானென்பது கூறல்.

(12) (*a*) பிணிபோக்க வேண்டேன் மருந் தெனக்கு!
(*b*) மணியோசை கேட்டே யான் பிழைப்பேன்
(*c*) பணிமோசஞ் செய்யும் பாவியர் நேசம்
அணிமா சித்திபோ லறவொழிப் பேன்!

13. “தர்மம்சர” வென்ற வேதவாக்கின் உண்மையும் உத்கிருஷ்டமு முணர்த்தல்.

(13) அறவொழித் தாலவர் கூட்டுற வைப்
பிறவொழித் தல்வேண்டா பூவுல கில்
அறவழி யில்லா மறவழி நீக்கில்
பிறவழி யெல்லாம் அறவழி யே ! (*d*)

---

வும், (விளங்கும்) தான் (தத்பதலக்ஷியார்த்தமான பரமாத்மா), ‘அருவே யுருவும் உருவேயருவுமா’-சிவமே சக்தியாகவும் சக்தியே சிவமாகவும் (சிவசக்திபேதமில்லாமல்) அழகிய உருவமமைந்த ‘திருவுருவானது’ “ஸ்ரீ தருவாம்”. (ஆனந்தத்தாய்மொழியில் உ-வது தரிசனைப்படலத்தில் குருமூர்த்தம்‘உருக்காட்டியுருவழித்தல்’ என்பதைப் பார்க்கவும்) Compare the words of St: Tirumoolar who says:—

“ உருவன்றியேநின் றுருவம்புணர்க்கும்
கருவன்றியேநின் றுதான்கருவாகு
மருவன்றியேநின் றமாயப்பிரானைக்
குருவன்றியாவர்க்குங்கூடவொண்ணாதே.”—திருமந்திரம்.

குருமூர்த்தமும் குருதரிசனமுமின்றி ‘உண்மை ” யுணர்வதற் கரிதாம் என்பதைப்பற்றி யேசுநாதர் நன்றாகச் சொல்லியிருக்கிறார். எம்பெருமான் திருமூலதேவரும் அப்படியே,—

“ திருவாய சித்தியு முத்தியுஞ் சீர்மை
மருளாதருளும் மயக்கறு வாய்மைப்
பொருளாய வேதாந்தப் போதமு நாத
னுருவா யருளாவிடி லோர வொண்ணாதே.”—திருமந்திரம்.

(10) ¶ *Cf.* “மையலதற நீங்க மண்ணும்விண்ணு மொன்றாகித், தையலாள் வித்தைபாற் றாபமேற்கொ [ண்டேனான்.”

(11) ‡‡ Compare: “மௌனமந்திராதிக்கிய வித்யை”யை வியந்து கூறியபடியென்க.

(12) (*a*) இது திருவருட்பாவில் “ நினைப்பு மறப்பு நெடும்பசியு மற்றால், அனைத்துலகும் வீடா மது.” என்ற ஔவைகுறளைத் தழுவிநிற்றலுணர்த்தியபடியென்க. (*b*) “நாதானுசந்தானத்தாலே” யென்றபடி. (*c*) “ காம்யபூஜைசெய்யும் கிரியாலோலிகளான ” பாவியர் சங்கம் என்றபடி.

(13) (*d*) ‘தர்மம்சர’ வென்று ஓதிய உத்தமவழியே.

14. 'தர்மம் சர' என்னும் வேதவாக்கே குருசேவையளிக்கு மென்பதுணர்த்தல்.

(14) அறவழி யேபது குருவழி யாம்
மறவழி யெல்லாம பிற'வழி † யாம்
அறவழி யேதனி ‡ வழிநடந் தால்
அறவழி யேகுரு எதிர்ப்படு வார்!

15. குருதரிசன விசேஷத்தால் 'உருக்காட்டியுருவழித்தல்' என்பது சித்திக்கில் " ஸ்ரீகுரு: ஸர்வகாரணபூதாசக்தி: " என்னும் சுருதிவாக்கியத்தின் லக்ஷியம் சித்திக்குமென்பதுணர்த்தல்.

(15) எதிர்ப்படு வாரவர் ஸ்ரீகுரு வாய்
எழில்பெறு மவருரு ஸ்ரீயுரு † வாம்
எழில்பெறு ஸ்ரீயுரு அருவி லாகில்
எதிர்ப்படு "ஸ்ரீகுரு:" "காரணபூதா சக்தியதே!"

16. சுருதிவாக்கிய லக்ஷியம் சித்தித்துச் சகஜஞானமுண்டானல் திரிபுடி நழுவிப்போச, விதேஹ கைவல்யமாம் அகண்டலக்ஷியாநந்தம் சித்திக்கு மென்பதுணர்த்தல்.

(16) காரணபூதா சக்தியதே காரியவுலகில் பெண்ணுருவம்!
காரணபூதா சக்தியதே காரணகாரிய தோரணையும்!
"காரணகாரிய தோரணை" அறிதலே "யோக-க்ஷேமம்" (1)
காரணகாரிய தோரணை யாமவள் "லக்ஷ்யாநந்தம்!" (2)

ஓம் ஸ்ரீகுருவே நமஃ!

(14) † பிற'வழி=பிறழ்வழி=தப்புவழி; தவறுதலுக்கிடமாம் வழி.

‡ ஸர்வஸங்கபரித்தியாக சித்தனுய், அல்லது, அசங்கனுயிருந்துகொண்டு; அதாவது பற்றற்றவனுய் என்றபடி.

(15) † ஸ்வயம்பிரகாச திவ்யதேஜோமயமான 'காமகலை'யே குருமூர்த்தமாய்த்தோன்றும். அது "உருவன்றியே நின்று உருவம் புணர்க்கும்." (ஆனந்தத்தாய்மொழியில் உ-வது, தரிசனப்படலத்தில் 'உருக்காட்டியுவருவழித்தல்' என்பதைப் பார்க்க.)

(16) (1) " அப்ராப்தப்ராபணம் யோகஃ க்ஷேமோ லப்தஸ்யபாலநம் " என்னும் வாக்கியத்தால் இதன் அர்த்தம் விளங்கும். (விவேகசிந்தாமணி 17-வது புத்தகம், 4-வது சஞ்சிகை, 97-வது பக்கம் பார்க்க).

(2) " லக்ஷியம் " என்றால் " குறி "=" காட்டுக்குறியுங்கடந்தவர் " கைகாட்டுஞ் சின்முத்திரா லக்ஷணத்தின் "குறி" யென்று கொள்க. "ஆநந்தம்" - ஞாதுர், ஞேயம் (அறிவான், அறிபொருள்) இரண்டும் ஒன்றேயாகி ஞானமாத்திரமாய் நிற்றல் உண்மையான ஆனந்தமாம். திரிபுடி நழுவினவிடத்தே யுதிப்பதொன்றெதுவோ அதுவே "ஆநந்தம்."

" காரியமேழுங் கரந்திடுமாயையுள்
காரணமேழுங் காக்குங்கடுவெளி
காரியகாரண வாதனைப்பற்றறப்
பாரணவுருப சாந்தப்பரிசிதே." — திருமந்திரம்.

(இத்திருமந்திரந்தானே "லக்ஷியாநந்தம்" என்னும் பதத்திற்கு லக்ஷியார்த்தமாம்.)

Compare: " அறிவார்பராசக்தியாநந்தமென்பர்
அறிவார் அறிவுருவாமவளென்பர்
அறிவார்கருமமவளிச்சையென்பர்
அறிவார்பானுமவளிடந்தானே." — திருமந்திரம்.

# உபநிஷதர்த்த தீபிகை.

## ௭. ஹம்ஸோபநிஷத்.

(1) ஸநத்ஸுஜாதரைப்பார்த்து கௌதமர் சொன்னதாவது:"சகலதர்மங்களையுமறிந்தவரும் சர்வசாஸ்திரங்களிலும் தேர்ந்தவருமான ஓ பகவானே! பிரஹ்மவித்யையின் உத்பத்தி என்ன உபாயத்தாலாகும்? (அதைச் சொல்லவேண்டுமென்றார்).

(2) ஸநத்ஸுஜாதர் சொன்னார்:— சர்வ வேதங்களையும் விசாரணை செய்து சிவனுடைய அபிப்பிராயத்தை அறிந்து அவரால் பார்வதியின் பொருட்டு சொல்லப்பட்ட தத்துவத்தைச் சொல்லுகிறேன்! ஓ கௌதமா! கேள்,—

(3) யோகிகளுக்கோர் பொக்கிஷத்துக்குச் சமானமானதும், ஹம்ஸத்தின் (ஜீவனுடைய) நடையை விஸ்தரிப்பதும், போக மோக்ஷ பலன்களைக் கொடுப்பதுமான இது சொல்லக்கூடாதது; அதிரகசியமானது.

[குறிப்பு.—இம்மூன்று சுலோகங்களும் அநேகபிரதிகளில் காணப்படவில்லை. சங்கராநந்தரும் உரையிடவில்லை. நாராயணர் மாத்திரம் உரையிட்டிருக்கிறார். நாராயணர் மூன்றாவது சுலோகத்தில் "யோகினீ கோஶஸந்நிபம்" என்று ஓர் பாடம் சொல்லி அதற்கு, யோகினீ கோசமென்னு மோர் யோக சாஸ்திரம் பார்வதியால் சொல்லப்பட்டதென்றும் அதற்குச் சமானமாக இச்சாஸ்திரமும் இருக்குமென்று அர்த்தம்பண்ணிஅந்தப்பாடத்தை விட நாம் மேல்மொழிபெயர்த்ததே சரியானபாடமென்று சொல்லுகின்றார்.]

(4) [உப] இப்பவும் ஹம்ஸம், பரமஹம்ஸம் இவைகளின் நிர்ணயத்தை சாந்தனும் தாந்தனும் (இந்திரியங்களின் வெளிப்போக்கையடக்கினவனும்)குருபக்தியோடு கூடினவனுமிருக்கிற பிரஹ்மசாரியின்பொருட்டுவியாக்கியானம்செய்கின்றோம். ஹம்ஸஃஹம்ஸஃஎன்று சதாகாலமும் (ஜெபித்துக்கொண்டு) இவன் (பிராணபுத்தியாகிய உபாதிகளுடன் கூடிய ஜீவன்) சர்வதேகங்களிலும், கட்டைகளுள் அக்நியைப்போலும் எள்ளினுள் எண்ணெயைப் போலும் வியாபித்து நிற்பன். அவனை அறிந்தவன் மிருத்தியுவை (மரணகாரணத்தை) யடையமாட்டான். குதத்தை (ஆசனவாயை) நிரோதனம்செய்து, ஆதாரத்தினின்றும் வாயுவை யெழுப்பி, ஸ்வாதிஷ்டானத்தை மூன்றுதடவைபிரதக்ஷணம் செய்து மணிபூரகத்தையடைந்து அநாகதத்தைத்தாண்டி, விசுத்தியில் பிராணன்களைநிரோதஞ்செய்து, ஆஞ்ஞையைத் தியானம்செய்து, பிரஹ்மரந்திரத்தை தியானம் செய்து, மும்மாத்திரை (யான பிரணவமே) தானென்று சதாகாலமும் தியானம்செய்து கொண்டு பிறகு நாதத்தை ஆதாரம்முதல் பிரஹ்மரந்திரம் வரையில் சுத்த ஸ்படிக வர்ணமாக (தியானம் செய்பவும்). அதுவே (அந்நாதமே) பிரஹ்மமென்றும் பரமாத்மாவென்றும் சொல்லப்படும்.

[குறிப்பு:--ஹம்ஸஃஎன்றால் சம்சாரத்தில்செல்பவன்: (ஹன்=செல்லுதல்)என்றும்,பரமஹம்சஃஎன்றால் 'பரமமானதும்'(உயர்ந்ததும்) அஞ்ஞானத்தையும், அதன் கார்யங்களையும் வாசனைகளையும் தன் ஆத்மாவின் தாதாத்மிக ஞானத்தால் "கொல்வது"(ஹன்=கொல்லுதல்)எதுவோ அது பரமஹம்சம்என்றும், இவ்விரு விஷயங்களும் இந்த உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன வென்று சங்கராநந்தர் உரை. நாராயணர் 'ஹம்ஸம்' என்பது பிராணரூபமான ஆத்மாவென்பர். குதத்தை நிரோதனம் செய்வதாவது அபானவாயுவை கீழ் நோக்கிச் செல்லாமற் றடுத்தல். மேல்நோக்கும் மூச்சு பிராணனென்றும் கீழ்நோக்கிச் செல்லும் மூச்சு அபானனென்றும் சொல்லப்படும். பிராணன் ஹஃ என்று சப்தித்துக்கொண்டும், அபானன் ஸஃ என்று சப்தித்துக் கொண்டும் செல்வதால், பிராணவாயுவுக்கே ஹம்ஸஃ என்று பெயர் சொல்லப்படுமென்பது நாராயணருரை. ஆதாரத்தினின்றும், வாயுவை எழுப்பும் பிரகாரம் நாராயணரால் பின்வருமாறு சொல்லப்படுகின்றது: ஆதாரத்திற்கும் சுவாதிஷ்டானத்திற்கும் மத்தியிலுள்ள அக்னிகுண்டத்தினடியில் மனதை நிறுத்த, "மன் மனமெங்குண்டு வாயுவுமங்குண்டு" எனும் நேர்

மைப்படி வாயு அவ்விடம் செல்ல, பிராணவாயுவின் சேர்க்கையால் அக்னி ஜ்வலித்து தன் குணப்படி மேல்நோக்கிச் செல்ல, வாயுவும் மேல்நோக்கிச்சென்று ஆறு தாரங்களையும் கடந்துபோய் நிற்கும். பிரஹ்மாந்திரம் என்பது ஸ்வயம்பிரகாசரான ஆநந்த ஆத்மாவை அறியும் இடம். அது கபாலத்தின் மூன்று பாகங்களும் சேருமிடத்தில் சஹஸ்ரதளகமல கர்ணிகையின் மத்தியலுள்ள சுஷும்னையின் நுனியென்பது சங்கரானந்தர் வியாக்கியானம். "மும்மாத்திரை" என்பது அகார உகார மகாரங்களாகிய மூன்று மாத்திரைகளுடன் கூடிய பிரணவம். இவ்விடத்தில் நாதத்திற்கு வர்ணம் தியானத்தின் பொருட்டுக் கல்பித்துச்சொல்லப்பட்டது. இந்நாதமே தேசகாலவஸ்துக்களால் பரிச்சேதமாகாத பிரஹ்மம்: ஜகத்துக்கு உத்பத்தி ஸ்திதி லயகாரணமானது.]

இதன்பிறகு அஜபாமந்திரத்தின் லக்ஷணத்தைச் சொல்கிறார்.

(5) [உப][இந்த ஹம்ஸஃ என்கிற அஜபா காயத்திரி மஹாமந்திரத்திற்கு] ஹம்ஸஃ ரிஷி, அவ்யக்த காயத்திரீ சந்தஸ், பரமஹம்ஸஃதேவதை, ஹம் என்பது பீஜம், ஸஃ என்பது சக்தி, ஸோஹம் என்பது கீலகம். "ஆறு" என்கிற கணக்குப்படி ஓர் பகல் இரவுக்குள் 21,600 கணக்காகும். "சூர்யாய, ஸோமாய, நிரஞ்சநாய, நிராபாஸாய, அதனு சூக்ஷ்மபிரசோதயாத்," என்றும் "அக்னீஷோமாப்யாம் வௌஷட்" என்றும் ஹிருதயமுதலிய அங்கநியாசங்களும், கரநியாசங்களும் ஏற்படும். இந்தப்பிரகாரம் செய்து எட்டு இதழ்களுடன் கூடின ஹிருதயகமலத்தில் ஹம்ஸரூபமாகிய ஆத்மாவை தியானம் செய்யவேண்டும்.

[குறிப்பு:—மொழிபெயர்ப்பு சங்கரானந்தர்பாடத்தை அனுசரித்துச் செய்திருக்கிறது. அவ்யக்தகாயத்ரீயை சந்தஸாகச் சொல்லியிருப்பது ஹம்சனாகிய ஜீவன் அஞ்ஞானமாகிய ஆவரணத்தால் மூடப்பட்டிருக்கும் காரணத்தால் சொல்லப்பட்டது. ரிஷி என்பது மந்திரத்தைத் தியான வாயிலாகப் பார்த்தறிந்தவனைக் குறிக்கும். பரமஹம்சமாகிய பிரஹ்மமே தியானிக்கப்படும் பொருளாகிய தேவதை. சங்கரானந்தர் பாடத்தில் சக்தி, பீஜம், கீலகம், இவைகள் காணப்படவில்லை; ஆகிலும் நாராயணர் பாடத்தி லிருப்பதாலும் அவைகள் மந்திரத்திற்கு முக்கியாம்சங்க ளானதாலும் சேர்த்து மொழிபெயர்த்திருக்கிறேன். "ஆறு என்கிற கணக்கென்பது பகலை ஆறு பாகமாகவும், இரவை ஆறுபாகமாகவும் பிரித்து, ஒவ்வொருபாகத்தை ஒவ்வொரு ஆதாரதேவதைக்கு அர்ப்பணம் செய்வதைக் குறிக்கும். இதன் விபரம் என்னவென்றால் ஓர் இராப்பகல் நடக்கும் 21,600 சுவாசங்களையும் மூலாதாரதேவதையாகிய கணேசனுக்கு 600, சுவாதிஷ்டானதேவதையாகிய பிரம்மாவுக்கு 6000, மணிபூரக தேவதையாகிய விஷ்ணுவுக்கு 6000, அநாகததேவதையாகிய ருத்திரனுக்கு 6000, விசுத்திதேவதையாகிய ஜீவாத்மாவுக்கு 1000, ஆஞ்ஞையின் தேவதையாகிய பரமாத்மாவுக்கு 1000, பிரமரந்திர நாதாந்த தேவதையாகிய ஸ்ரீகுருவுக்கு 1000, இவ்விதம் அர்ப்பிதம் செய்யவும். ஷடங்கநியாசத்தில் சொல்லப்படும் ஷடங்கங்களாவன, ஹிருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அஸ்திரம் என்பன. கரநியாசங்கள் ஐந்துகைவிரல்களிலும் அவைகளின் சமஷ்டியிலுமாக ஆறு இடங்களில் செய்யப்படும். சங்கரானந்தர் பாடப்படி ஷடங்கநியாசம் பின்வருமாறாகும்:—

(1) ஓம் சூர்யாய ஹிருதயயே நமஃ-இதன்பொருள் ஆத்மைக்யமான அறிவைக் கொடுக்கும் சோபனகரமான வழியைச் சேப்வோன்.

(2) ஓம் ஸோமாய சிரஸேஸ்வாஹா. உமையோடு கூடினவன் அதாவது ஜீவப்பிரஹ்மஐக்கிய ஞானத்தோடு கூடினவன்; அல்லது, பிரியமான பார்வையையுடையவன்.

(3) ஓம் நிரஞ்சனாய சிகாயைவஷட். அதாவது இருளாகிய அவித்தியாகாரண மற்றவன்.

(4) ஓம் நிராபாஸாய கவசாயஹும் அதாவது ஆபாசமற்றவன்; ஆபாஸமெனில் பிரதிபலனத்தோற்றம். வஸ்துரூப சம்ஸ்காரமாகிய பிரபஞ்ச மற்றவனென்று பொருள்.

(5) ஓம் அதனுசூக்ஷ்மாய பிரசோதயாத் அஸ்த்ராயபட் - "அதனு" வென்றால் ஸ்தூல சூக்ஷ்ம அவித்யாதேஹங்களில்லாதவன். "சூக்ஷ்ம" மென்றால் அறியக் கூடாதவன், "பிரசோதயாத்" என்பது புத்தியைத் தன்னிடம் ஐக்கியப்படுவதில் செலுத்தட்டும் எனப்பொருள்.

139

(6) ஓ௦ அக்நீஷோமாப்பாம் நேத்ராப்யாம் வௌஷட் - "அக்நி" எனவே அக்ரத்திற்கு(ஆத்ம ஸ்வரூபத்திற்கு) நடத்துவது, எனப் பொருள் "சோம" என்பது முன்னரே இரண்டாவது நியாசத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே ஸோம சூர்யரூபியானவர் அதாவது ஆத்மஸ்வரூபத்திற் சேர்த்து ஐக்கியஞானமாகிய உமையுடன் சேர்ந்தவர்எனப்பொருள். இதுவரை சங்கரானந்தர் உரைப்படி விவரித்தோம்.

நாராயணரோ வேறுவிதமாக உபநிஷத்வாக்யத்தை அர்த்தம் செய்து நியாசத்தைச் சொல்கிறார். அவர்சொல்லியபடி நியாசமானது பின்வருமாறு:

(1) ஓ௦ சூர்யாய ஹ்ருதயாயநமஃ.
(2) ஓ௦ சோமாய சிரசேஸ்வாஹா.
(3) ஓ௦ நிரஞ்சநாய சிகாயை வஷட்.
(4) ஓ௦ நிராபாஸாய கவசாயஹு௦.
(5) ஓ௦ தனுசூக்ஷ்ம நேத்ரத்ரயாய வௌஷட்.
(6) ஓ௦ பிரசோதயாத் அஸ்த்ராயபட்.

"அக்நீ ஷோமாப்யாம் வௌஷட்" என்பதை இவ்வாறு மந்திரங்களிலும் சேர்க்கவேண்டுமென்று சொல்லுகிறார். ஏனெனில் ஹம்ஸத்தை அர்த்தநாரீசுவர ரூபமாக தியானம் செய்ய வேணடுமென்றும், அந்தரூபத்தில் புருஷபாகம் ஹ௦ என்றும், பிரகிருதியாகிய பெண்பாகம் ஸஃ என்றும்,ஆகவே ஹ௦ஸஃ என்பது பிரக்ருதி புருஷ ஐக்கியத்தைக் குறிக்கும் என்றும், அவ்விதமே ஹம் என்பது அக்னியையும் ஸஃ என்பது சோமனே அதாவது சந்திரனையும் குறிக்கும், என்றும், ஆகவே பிரகிருதி புருஷசேர்க்கை ரூபமாகிய ஹ௦ஸ மந்த்ரம் ஒவ்வொரு அங்கநியாஸ மந்திரத்திலும் சேர்க்கவேண்டு மென்கிறார். வேறு விதமாக ஹ்ராம், ஹ்ரீம் முதலிய பீஜங்களைச் சேர்த்தும் நியாஸம் செய்வது சம்பிரதாயமென்றும் சொல்லுகிறார். சூதசம்ஹிதையில் ஆத்ம மந்திரமாகிய அஜபாவிதான அத்தியாயத்தில் இம்மந்திரத்திற்கு ரிஷி பிரஹ்மாவென்று சொல்லப்பட்டிருக்கின்றது.]

இதன்மேல் தியேய வஸ்துவாகிய ஹம்ஸத்தின் ரூபம் சொல்லப்படுகிறது

6. [உப] (அதற்கு) அக்நியும் சந்திரனும் இரண்டுசிறகுகள், ஓம்காரம் சிரசு, பிந்து கண், ருத்திரன் முகம், ருத்திராணி இரு பாதங்கள், காலம் இருகைகள், அக்நி இருபக்கங்களாகும். ஞானமும் வைராக்கியமும் மிகுந்த இரண்டு (பார்சுவங்களாகும்).

[குறிப்பு:—இது நாராயணர் பாடப்படியும் உரைப்படியும் எழுதியது. சங்கரானந்தர் பாடம் சுத்தமானதாய்த் தோன்றுததாலும், உபநிஷத் மூலப்பிரதிகளில் காணப்படாததாலும் எடுக்கப்படவில்லை. ஓ௦காரமானது சிருஷ்டிக்கு முதன்மையானதால் சிரசாகச் சொல்லப்படும். பிந்து பிரகாச ரூபமானதாலும் வந்துளாகார மானதாலும் அனுஸ்வாரம் பிரஹ்ம வாசகமானதாலும் பிந்துவை நேத்திரமாகச் சொல்லப்பட்டது. முகம் வளைவாய் (வக்ரமாய்) இருப்பதால் ருத்திரனுக்கு ஒப்பிடப்பட்டது. சர்வத்திற்கும் ஆதாரமானதால் ருத்திராணியை கால்களாகச் சொல்லப்பட்டது. காலம் சகலத்தையும் கொடுப்பதால் கைகளாகச் சொல்லப்பட்டது. இவை நாராயணரின் உரைப்பிரகாரம். ருத்திரன் என்கிற பதத்திற்கு நும்=துக்கத்தை, திரவமாக (நாசமாக) ச் செய்கிறவனென்று சங்கரானந்தர் பொருள் சொல்கிறார்.]

7. [உப] இந்த (ஹம்ஸனே) கோடி சூர்யபிரகாசனுனவன். எவனுல் இதுவெல்லாம் (சப்த பிரத்யயமாகிய சகல பிரபஞ்சமும்)வியாபிக்கப்பட்டிருக்கிறதோ அந்த பரமஹம்ஸனுவன் அவனுக்கு எட்டுவித விருத்திகளுண்டு. (ஹ்ருதய கமலத்தின்) கிழக்கு இதழில் புண்யத்தினிடம் புத்தியும், ஆக்நேய(தளத்தில்)நித்திரை ஆலஸ்யம் (சோம்பல்) முதலியனவும் உண்டாகும். தெற்கு தளத்தில் க்ரூரத்தில் புத்தியும், நிர்ருதியில் (தென்மேற்கு தளத்தில்) பாபத்தினிடத்தில் (=பாப கார்யங்களில்) புத்தியும்,வாருணத்தில் (=மேற்கு தளத்தில்) கிரீடையும் (விளையாட்டு புத்தியும்), வாயுவில் (=வடமேற்கு தளத்தில்) போக்கில் (தேசாந்தரப் பிரயாணத்தில்) புத்தியும், வடக்கு (தளத்தில்) ரதியினிடம் (=ஸ்திரீவிஷயமாகிய சுகங்களிடம்) பிரியமும், ஈசானத்தில் (வடகிழக்கு தளத்தில்) திரவ்யத்தைச் சேர்ப்பதில் (புத்தியும் உண்டாகும்). †

† இதன்விஸ்தாரத்தை நாரதபரிவ்ராஜக உபநிஷத் 6-வது உபதேசத்தில் பார்க்கலாம்.

[குறிப்பு:—இந்த வாக்கியத்தால் புத்திக்கு சாக்ஷியாகிய ஜீவன் உண்மையில் ஸ்வயம்பிரகாசரான பரமஹம்சருக்கு அபின்னமானவனென்று அறிவிக்கப்படுகிறது.]

8. [உப] (இதழ்களின்) மத்தியில் வைராக்கியம், கேசரத்தில் சாக்கிராவஸ்தை, கர்ணிகையில் ஸ்வப்நம், லிங்கத்தில் (கர்ணிகையின் மத்தியில்) சுஷுப்தி, இப்பத்மத்தை விட்ட (தாண்டின) விடத்தில் துரீயம், எப்பொழுது ஹம்ஸனானவன் நாதத்தில் லயமாகிறானோ அப்பொழுது துரீயாதீதமாகிய உன்மனா; [அதுவே] அஜபாவின் முடிவென்று சொல்லப்படும். இந்தப் பிரகாரம் சகலமும் (மேற்சொன்னவைகளெல்லாம்) ஹம்ஸத்தின் வசத்தா லுண்டாவதால் மனமானது (உன்மனீ யாகிய துரீயாதீதத்தை யடையும் வரையில்) விசாரிக்கப்படும். இது (இந்த அஜபாமந்தரமாவது) கோடி ஜபமானதும் நாதமனுபவிக்கப்படும். அதுவும் பத்துவிதமாக வுண்டாகும். முதலில் சிணீயென்றும் இரண்டாவது சின்சிணீ யென்றும், மூன்றாவது மணிநாதமும், நாலாவது சங்கநாதமும், ஐந்தாவது வீணாநாதமும், ஆறாவது தாளநாதமும், ஏழாவது புல்லாங்குழல் நாதமும், எட்டாவது பேரீ நாதமும், ஒன்பதாவது மிருதங்கநாதமும், பத்தாவது மேகநாதமும் (உண்டாகும்). (முந்திய) ஒன்பதையும் தள்ளிப் பத்தாவதையே அப்பியாசம் செய்யவேண்டும்.

[குறிப்பு:—சங்கரானந்தர் உரையின்படி மொழிபெயர்ப்பு. நாராயணர், மனமே ஹம்ஸமாவதால் துரீயாதீதம் வரை யதையே விசாரிக்கவேண்டியதென்று சொல்கிறார். இந்த பத்மத்தை விட்டவிடம் துரீயம் என்பதற்கு எட்டு இதழ்களுடன் கூடினதாய் சொல்லப்பட்ட ஹிருதய கமலத்தை நான் இந்த பத்மத்தில் மாத்திரம் இல்லை, நான் சர்வாத்மகன், தேசகாலவஸ்து சூன்யனான ஸ்வயம்பிரகாச ஆனந்தாத்மா என்னும் புத்தியால் அவ்விருதய கமலத்தை விட்டவிடமே துரீயம் எனப்பொருள். நான் கர்த்தா போக்தாவென்கிற புத்தியுடன் கூடிய ஜீவன் எக்காலத்தில் சத்தத்தின் த்வனியின் கடையில் நிற்கும் வாக்குமனதுக்கெட்டாத பரமாத்மாவில் லயிப்பனோ அதுவே துரீயாதீதம். 'உன்மனா'' வென்பது மனம் மேற்போய் லயித்தவிடம்.]

9-11. [உப] முதலில் (முதல்நாதத்தை) அப்பியாசித்தால் சரீரம் சின்சிணீ ரூபமாகும், இரண்டாவதில் தேக முடையும், மூன்றாவதில் களைக்கும், நாலாவதில் தலை நடுக்கமுண்டாகும், ஐந்தாவதில் வாயில் ஊற்றமுண்டாகும், ஆறாவதில் அமிருதமொழுகும், ஏழாவதில் மறைபொருள்களின் ஞானமும், எட்டாவதில் பரைவாக்கும் (சித்திக்கும்). ஒன்பதாவதில் தேஹம் மறைவதுடன் திவ்யமாகிய பார்வையுடன் கூடி மலமற்றதாகும்; பத்தாவதில் (நாதத்தின் அப்பியாசத்தால்) பிரஹ்மாத்ம சந்நிதியில் (=சேர்க்கையில்) பரப்பிரஹ்ம (சாக்ஷாத்காரமாகும்).

12. [உப] அதில் (பரப்பிரஹ்மத்தில்) மனம் லயிக்கும். மனதின் சங்கல்ப விகல்பங்களும் புண்யபாபங்களும் நாசமானதும், சக்தியாத்மாவானவரும் (=சக்தியில் அந்தர்யாமியாயிருப்பவரும்), சர்வவியாபியாயும், ஸ்வயம்ஜோதியாயும், சுத்தராயும், புத்தராயும் (ஞானரூபியாயும்), நித்தியராயும், நிரஞ்சனராயும் (நிர்மலராயும்) சாந்தராயும் இருக்கும் சதாசிவனாகிறான். இது வேதத்தின்சொல்.

[குறிப்பு:—இந்த ஹம்ஸ மந்திரமானது, சக்தியக்ஷரமான ஸ: என்பதை முன்வைக்க ஸோஹம் என நிற்கும். இதில் ஸ: என்பதின் பொருளான சக்தியை சாக்ஷாத்கரித்து அதன்மூலமாய் ஹம் என்பதின் பொருளாகிய சிவத்தை யடைய வேண்டும். ஸோஹம் என்பதின் பொருளாகிய உபாதியுள்ள ஜீவன் உபாதிகளற்றதும், அதாவது மந்திரத்தி லுள்ள வியஞ்சனங்களை (=மெய்யெழுத்துக்களைத்) தள்ளிப் பார்க்க ஓம் என்கிற பிரணவமாக மிஞ்சி நிற்கும். ஆகவே ஹம்ஸ மந்திரம் ஜீவனைக் குறிப்பதாகவும், பிரணவம் பிரஹ்மத்தைக் குறிப்பதாகவும் சொல்லப்படும். மேலும் ஹம்ஸம்

ஹிதையில் யஞ்ஞ வைபவ கண்டத்தில் ஏழாவது அத்தியாயத்தில் இவ்வாத்ம மந்திரமானது மகாவாக்கியங்களின் உட்பொருளையே அமைத்துள்ளதென்று சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியெனில் ஸோஹம் என்கிற பதத்தை ஸ:+அஹம் எனப்பிரிக்க 'அவன் நான்' அதாவது பரப்ரஹ்மமாகிய அவனே நான் எனப் பொருளாகும். இவ்விதமே "ஹம்ஸ:" என்பது, முதலிலுள்ள லோபமடைந்த அகாரத்தை சேர்க்கவே அஹம் + ஸ: அதாவது அவனே நான் எனப்பொருள்படும். ஆகவே பூர்ண வாக்கியமானது "ஹம்ஸஸ்ஸோஹம் ஸோஹம் ஹம்ஸ:" என நிற்கும்.

இங்ஙனம், விவேகசிந்தாமணி
உபநிஷதர்த்த தீபிகையில் நான்காவது
ஹம்ஸோபநிஷத் வாச்சியார்த்தம்
ஸம்பூர்ணம்.

---

## *" The Sins of the Parents visited on their Daughters. "*

## " மாதாபிதாக்கள் செய்த கர்மம் மக்களைக்காக்கும்."

"மாதாபிதாக்கள் செய்தகர்மம் மக்களைக் காக்கும்" என்பதோர் பண்டைக் காலத்துப் பழமொழி. நவீனநாகரிகம் நிறைந்த இக்காலத்தில் மற்றெல்லாவற்றிற்கும் நவீனமானதோருபயோகம் ஏற்பட்டிருப்பதுபோலிதற்கும் நவீனமான உபயோகமொன்று ஏற்பட்டிருக்கிறது. இதன்பூர்வார்த்தம் என்னவெனில் தேஹபரம்பரையில் மாதாபிதாக்கள் தம்மக்கள் உத்பத்திக்கு மூலமாயிருக்கிறார்களாதலால், அவர்களுடைய கர்மம் பாரம்பரிய தர்மவிதிப்படி (Law of Heridity) அவர்கள் மக்களுடைய தேஹதருமத்தில் வினைப்பயனைப் விளங்கும் என்பதாம். இது சாஸ்திரத்திற்கும் சங்கல்பத்திற்கும் ஒத்ததோர் உண்மையாம்.

ஆனால் இக்காலத்தில் விவாகதர்மம் கெட்டுக்கிடப்பதால், புதுமணஞ் செய்துள்ள போக்கிலித்தம்பிரான்கள் 'மாப்பிள்ளை முறுக்கு' முறுக்குவதில் முன்பின் யோசனையின்றிப் பெண்ணைப்பெற்றோரை மருட்டிப்புருட்டிக் காசுபறிப்பதற்கு வாய்ந்ததோர் வசனமாக உபயோகிக்கிறார்கள். பெண்ணைக் கொடுத்தால் போதும் என்றிருக்கும் பேமானிகளெல்லாம், பெண்ணை வதுவைகொண்டதும் வரம்புகடந்து மானங்கெட்டு மரியாதைகெட்டு நடந்து கொள்வதுமன்றி வியவஸ்தையில்லாமல் மாமனாரைக் 'காசு பணம்கொடுத்தாலாச்சுது, இல்லாவிட்டால் உன்பெண்ணை என்னபாடுபடுத்துகிறேன்பார்!' என்றுபயமுறுத்துகிறார்கள். என்னதான் குலம், கோத்திரம் விசாரித்தாலும்இக்காலத்தில்விவாகத்துக்குப் பணம்வாங்குகிறதென்கிற வழக்கமொன்று "நல்லமரத்திற் புல்லுருவிபாய்ந்தாற்போல்" ஆதியாயுள்ள விவாகஸம்ஸ்காரத்தில் ஓர் துர்வாசனையாகப் பற்றிவிட்டபடியால், உத்தமகுணம்வாய்ந்தபிள்ளைகளன்றி மற்றதுகளெல்லாம் கலியாணத்தில் தாலிகட்டினது முதற்கொண்டு இரண்டொருபிள்ளை பெறுகிறவரையில் துள்ளிக்குதித்து தொப்பென்று விழுகிறதுகள். துள்ளினமாடு பொதிசுமக்கும் என்பதாக முன்னே பெண்ணைப் படுத்தினதற் கெல்லாம் பின்னுக்குவட்டியும் முதலுமாக ஸம்ஸாரம் தலையிலுரைத்ததும் பட்டனுபவிக்கிறார்களானாலும், இவர்கள் செய்யும் மூர்க்கத்தனம் இந்த மூர்க்கரை மணந்தபெண், இவர்கள்சம்பந்தஞ் செய்தகுடும்பம், அவர்கள் உற்றார் உறமுறையாரெல்லாருக்கும் வீணான மனவருத்தத்தையும் வியாகூலத்தையும் கொடுக்கிறது. "காசுபெறாத மாப்பிள்ளை" யெல்லாம் "காசுக்குவிங்கி" பேச்சைவிட்டுப் பெற்றோர்மனத்தைப் புண்படுத்துகிறார்கள். லஜ்ஜைகெட்ட இவர்களது உபத்திரவம் பொறுக்கப் பொறாமல், சிலர் இந்தப்பேமானிக்கு வாழ்க்கைப்பட்டு வரும் சுகத்தை நம் பெண் அனுபவிக்காமலிருப்பதே மேலென்று மாப்பிள்ளையை மரப்பிள்ளையாக்கித் தெருவில் விட்டுவிடுகிறார்கள். சிலர் அவ்வளவுக்குத் துணியாமல் தம் குழந்தை முகத்தைப் பார்த்து

இவர்கள் ஆடும் பேய்க்கூத்தையெல்லாம் பொறுத்தும்பொறுக்கமாட்டாதவர்களாய் வருந்துகிறார்கள். இன்னும் சிலர் "தலைவிதி" யென்று வந்ததை யனுபவித்துக்கொண் டிருக்கிறார்கள். பின்னும் சிலர் இந்தத் துள்ளுத்துள்ளுவதெல்லாம் கொஞ்சகாலத்திற்குத்தானே பார்த்துக்கொள்வோமென்று தைரியமா யிருக்கிறார்கள். இவர்கள் இக்கஷ்டத்தையெப்படிப்பொறுத்துக்கொண்டாலும், இந்தக் கோணங்கி மாப்பிள்ளைகள் செய்யும் குரங்காட்டங்களை யெல்லாம் எப்படிச்சகித்து நிர்வகித்துக் கொண்டாலுஞ்சரி 'மனம் குவிந்து மலர்ந்து' அன்பெனும் அருக்கன் ஒளிகண்டு மகிழுங்காலையில் அதற்குச் செய்யப்படும்தீங்கு நமதுஜாதிவீரியத்தையும் தேஜஸ்ஸையும் குறைக்குந்தன்மையதாகிற தென்பது நிச்சயம். ஆகையால் இப்பொழுது "விவாகஸம்ஸ்காரம்" இப்படி சந்தையிற் கந்தப்பொடி தூவின சமாசாரமா யிருப்பதை மாற்றிப் பூர்வம் அதற்கு ஏற்பட்டுள்ள மணகுண மஹிமையையும் தகைமையையும் குறையாதபடி காப்பாற்றுவது எப்படி யென்று விவேகிக ளெல்லாரும் வழிதேடிக் கொண் டிருக்கிறார்கள்.

ஒருவர் 14 வயதுவரையில் விவாஹம் கூடாதென்று சட்டமுண்டுபண்ணவேண்டுமென்கிறார். இது 'இந்தியன் ஸோஷியல் ரிபார்மர்' பத்திராசிரியர்கருத்து. மற்றொருவர் 16-வயதுவரையில் கன்னியாதோஷம் கழியாமையால் விவாக ஸம்ஸ்காரமான பெண் 16-வயது ஆகுமுன் புருஷனோடு கூடிவாழ அருகளல்ல வென்கிறார். இது ஸ்ரீசிவகங்கை ஸ்வாமிகளுடைய அபிப்பிராயம். ஒருவர் ஸ்ரீதனமெல்லாம் பெண்ணுக்குப்பின் பிறந்தஹத்துக்காரர்களைச் சேரவேண்டுமென்பது பிராசினமானசம்பிரதாயமாயிருக்க, பிரிட்டிஷ்கோர்ட்டார் அதைவிட்டு, இப்பொழுது கலியாணமானபெண்ணின் ஸ்ரீதனம் அவளிறந்தால் அவள்கணவனைச் சேர்ந்ததாகிற தென்று தீர்ப்புச் செய்திருக்கிறார்களென்றும்; இதனால் எத்தனையோபேர் ஸ்ரீஹத்திதோஷத்துக் காளாகிறார்களென்றும், ஒருவனுக்கு இப்படிஇரண்டு மூன்று பெண்டாட்டிகள் செத்தால் சீக்கிரம் அவன் பணக்காரனாய் விடலாமென்றும், இதுபெண்டாட்டியைக்கொல்லப் பலதானம் கொடுப்பதுபோலாகிறதென்றும், இந்தநவீனமான ஏற்பாட்டைக் கோர்ட்டார் மாற்ற வேண்டுமென்றும் சொல்கிறார். இது உலகத்தில் அடிபட் டனுபவசாலியான ஒருவர் அபிப்பிராயம். இன்னொருவர் இன்னொருவிதமாக அபிப்பிராயப் படுகிறார்.

இப்படி பரிகாரந் தேடுவதில் பலர்பலவிதமாயபிப்பிராயப்பட்டாலும், வியாதி என்னவோ பரிகரிக்கவேண்டியது தான் என்பதைப்பற்றி எல்லாரும் ஒரேமனதாய் உறுதிகொண் டிருக்கிறார்கள்.

"விவாகம்" நமக்குள் ஓர் ஆத்மஸம்ஸ்காரம். அப்படியென்றால் ஆத்மா அனுபவித்தறிய வேண்டிய அனுபவங்களில் ஒன்று. பூணூல்போடப் பெற்றவன் எப்படி பிரஹ்மத்தையறிய யத்தனித்துழைத்துக் குருகுலவாசஞ்செய்து வித்யாஸம்பந்நனாகியும் பிரஹ்மத்தை யறியாமல் தானே, பிரஹ்மசாரி விரதத்தை முடித்துவிட்டு, கிரஹஸ்தனாக இல்லறம் நடத்திபிரஹ்மசாக்ஷாத்காரம்பெறுவேனென்று கிரஹஸ்தாச்ரமம் புகுகிறானோ அப்படியே, விவாகஸம்ஸ்காரமானபெண்ணும் இல்லறம் நடத்தவேண்டித் தன்னைக் கைப்பிடித்த குலமகன் இல்லறதர்மத்தையுணராதவனாகவாவது, உணர்ந்துநடக்கப் போந்த சமர்த்திலானாகவாவது இருப்பதாகத் தென்பட்டால் கிரஹிணியாகாமல் தானே நித்தியகன்னிகையா யிருந்து தன்னுடைய தபோமஹிமையால் நற்கதியடையலாம். அடையப் பாத்திரமும் ஸ்வதந்திரமுமுள்ளவள் என்பது உத்தமசிலர்களான சிலபெரியோர்களுடைய கொள்கை. இது ஸநாதநமான தர்மத்துக்கு ஒத்ததாயுமிருக்கிறது. உத்தமியான ஒருபெண் தன்னுடைய பதிவிரதாதர்மத்

தாலே அதமனையும் நல்வழிக்குக் கொணர்ந்து தானும் நற்கதிபெறலாம். இதுமிகவும் அருமையானது. ஏனெனில் அவ்வளவு மனஉறுதியுள்ள பெண் சாக்ஷாத்கௌரியம்சமென்றுசொல்லவேண்டுமேயன்றி அவளை மானிடப் பெண்ணாகச் சொல்லக்கூடாது. இதுபூர்வஜன்மவாசனைமுதிர்ச்சியாலேயே யொக்கத் தக்கது. அவ்வளவு பரிபக்குவம் பெறாதவர்கள் இந்தஜன்மத்தில் தமது சொந்த முயற்சியால் இந்திரியநிக்கிரகம் செய்து முன்னுக்குவரலாம். இதிலும் எவ்வளவோ கஷ்டமிருக்கிறது. ஏனெனில் பெண்பால் அடிமையானதினாலே, துஷ்டர்களினின்றும் காப்பாற்றத்தக்க புருஷன் ஒருவன் அவளுக்கு வேண்டிய தவசிய மென்பர். இதுநிஜமேயானாலும், பால்யவிதந்துக்கள் விஷயத்தில் அப்படிப்பட்ட கொள்கை யனுஷ்டிக்கப் படாமையினாலே, விவாகஸம்ஸ்காரமான பெண்ணும் அவளுடைய விவேகவைராக்கியத்தினாலே தனக்குவாய்த்த தூர்த்தனொருவனைச் சேர்ந்து இல்லறம் நடத்துவது இயலாதென்றுணர்ந்து உணர்ந்தபடிநடக்கத்துணிவும்தைரியமுமுள்ளவளாயிருப்பாளாயின், அவள் இஷ்டத்திற்குவிரோதஞ் செய்வது தர்மமல்ல. இராஜாங்க நிர்ப்பந்தத்தால் அவள் தனக்கு இஷ்டபங்கம்வராதபடி காப்பாற்ற உத்தமரெல்லாரும் உடன்பட்டுழைக்கக் கடன்பட் டிருக்கிறார்கள். இந்தக்கடமையை ஜீவன் முக்தர்களான பெரியோர்களும் மகரிஷிகளும் செலுத்தத் தக்கவர்களேயன்றி மற்றப்படி சாமானியமான உலகபந்தங்களுக் குட்பட்ட கர்மிகள்செலுத்தவல்லமைவாய்ந்தவர்களாகார்கள். இஷ்டநஷ்டம் வந்தால் அது யாருக்கும் நன்மைபயக்காது. இஷ்டத்தின் வலியைப் பற்றித் திருமூல தேவர் இந்தத் திருமந்திரம் உபதேசித் திருக்கிறார்.

"கொட்டுக்குந்தாலியிரண்டேயிரண்டிற்குங்
கொட்டுக்குந்தாலிக்கும்பாரைவலிதென்பர்
கொட்டிக்குந்தாலிக்கும்பாரைக்குமூன்றிற்கு
மிஷ்டம்வலிதென்பரீசனருளே."

---

* கொட்டு=மண்கொட்டு. குந்தாலி=மரம்வெட்டுகிற கோடாலி. பாரை=கல்பிளக்கிற உளிப் பாரை.

## *Kannaki—A Social Drama.*

### கண்ணகி.

அங்கம். III.] [காட்சி 1.

இடம்:—காவிரிப்பூம்பட்டினத்தில்மாதவியின்வீடு.
காலம்:—மாலைக் காலம்.

பாத்திரர்:— மாதவி, மாதவியுடையசகி. தாய்க்கிழவி, கௌசிகன், பக்கத்துவீட்டுப் பருவதம்.

மாதவி கட்டிலின்மேல் படுத்துக்கொண்டு தானாகவேபேசிக்கொள்ளுகிறாள்: "ஆ! தெய்வமே! பெண்புத்தி பேதமை யென்று உலகத்தோர் சொல்லுவார்கள். அந்தப்பழமொழி என்விஷயத்தில்தானா பலிக்கவேண்டும். கடற்கரையில் எனதருமைக் காதலன் கோவலனும் நானும் விளையாட்டாயும் பரிகாசமாயும் பேசிக்கொண்டது வினையாக முடிந்ததே. இந்தப் பாவிச்சிறுக்கியாகிய நான் பின்னால்வருவதை முன்னதாகயோசியாமல் அன்னியபுருஷன் ஒருவன்மீது காதல்கொண்ட பாவனையாக நடித்து அதற்குரிய வரிப்பாட்டையும் பாடினதினாலல்லவோ இவ்வளவு தீங்கும் விளைந்தது. அப்படியாவது நான் வாஸ்தவத்தில் பிற புருஷனை இச்சித்ததுண்டா! இல்லையே. இல்லையென்றால் யார்நம்புவார்கள்! அந்த ஈஸ்வரனுக்குத்தான் கோவலன்மீது எனக்குள்ள அடங்காக்காதல் தெரியுமே யொழிய மற்றயாருக்குத்தான் தெரியும். யார்தான் உள்ளபடி என் மனோநிலைமையை அறியப் போகிறார்கள்! ஒருவருமில்லை. இவ்வளவுகாலம் பழகியும் கோவலன் இந்த மாதவியினுடைய மனோநிலைமையை அறியாமற் போனாரே. அதுவும் என்கால வித்தியாசம் தான், துர்ப்பாக்கியந்தான். அன்னிய புருஷன்மீது நான்இச்சைகொண்டிருப்பதாக நினைத்தல்லவோ அவர் என்னை நிராகரித்து அந்நிய தேசம் சென்று விட்டார். இதற்குநான் என்னசெய்வேன்! நான் அவரை எப்போது காண்பேன்? "கோவலா" என்று மனமகிழ்ந்து நான்அவரை எப்போது அழைப்பேன்? ஜெகதீசா! ஒன்றும் தோன்றவில்லையே! [மௌனமாகச்சிந்திக்கிறாள்.]

பருவதம்:--(மாதவியின் வீட்டுக்குள் சென்று கூடத்தில் உட்கார்ந்திருந்த தாய்க்கிழவியைப்பார்த்துப் புன்சிரிப்புடன்) என்னபாட்டி, சாவகாசமாய் உட்கார்ந்திருக்கின்றாயே! உண்டுகளித்து உல்லாசமாய் வீற்றிருக்கும் நினதுபாக்கியமேபாக்கியம்.

தாய்க்கிழவி:—என்னடிகுட்டி,என்னமோ கடமுடகடமுடங்கிருயே! நீ சொல்றது எனக்குப்புரியிலே.நீ படிச்சபடிப்பேஎங்கிட்டத்தாஞடிகாட்டணும்! சாதாரணமா நாங்கள்ளாம் பேசுருப்லேபேசேண்டி.

பருவதம்:—அங்ஙனமன்று பாட்டி; படித்தவர்களுக்கும் பாஷாபிமான முடையவர்களுக்கும் அழகு இலக்கண சுத்தமாய்ப் பேசுவதன்ருே?நான்பேசுவது இலக்கணமாய்த்தானிருக்கும். நினதுபுதல்வி மாதவி யாண்டுளாள்? சடுதியிற் சாற்றுமின்! (புன்னகை புரிகிருள்).

தாய்க்கிழவி:—எலக்கணமாம்! பிலக்கணமாம்! என்ஞடி பூச்சிபுடிக்கிறே! காற்று கீற்று என்று வாயில் வந்தபடிக்கி உளறிப்புட்டு இலக்கணம் வடிக்கிருளாம் எலக்கணம்! உன்னுடைய படிப்பை யெல்லாம் சுருட்டி மூலையிலேவச்சுப்புட்டு எங்களாட்டம்பேசு. அப்போத்தான் உன்கூடப் பேசுவேன். இல்லாவிட்டால் நான் எந்திரிச்சுப்போறண்டி போடி வேலெமெணக்கட்டவளே! (எழுந்திருக்கிருள்.)

பருவதம்:—(எழுந்திருந்தவளை இழுத்துஉட்காரவைத்து) இல்லைபாட்டி,இல்லை. நீசொல்லுகிறபடியே பேசுகிறேன்.கோபித்துக்கொள்ளாதே. உன்னுடைய மகள் மாதவி எங்கே? என்னசெய்கிருள்?

தாய்க்கிழவி:—அந்த வயத்தெரிச்சலே இப்ப ஏண்டி கிளப்பறே! எவனே தடிப்பய இவளைவிட்டுட்டுஊருக்குப்பூட்டானும்!மவஉருகிப்போரு!எப்போ பாத்தாலும் அழுது வழிந்தபடியே இருக்கா. அந்தப் பய தொலஞ்சா இவளுக்கென்ன? அவஞலே ஒத்த செப்புக்காசுக்குப் பிரயோசனமுண்டா? நித்தம் ஒண்ணுக்கு எத்தினியோ கிராக்கிவருது. அதையெல்லாம் விட்டுட்டு இப்படி இருந்தாக்கா நம்பகுலம் விருத்தியடைவது எப்படி? இந்தக் கழுதைமுண்டையை விட்டுதொலெஞ்சுபோவலாண்ணுலும் நமக்குக் காலம் வல்லெ, (அழுதகண்ணும் சிந்திய மூக்குமாகத் தேம்பித்தேம்பி ஆத்திரம் அடைக்கச்சொல்லுகிருள்).

பருவதம்:—இதற்காக என் இப்படி வருத்தப்படுகிருய்?மாதவி எங்கேஇருக்கிருள் சொல்லு.நான்போயவளுக்குவேண்டிய புத்திமதிகளைச் சொல்லுகிறேன்.

தாய்க்கிழவி:—ஆமா, அந்தப் படித்த முண்டைத்துக்கு இந்தப்படித்தமுண்டம் போய் புத்திசொல்லப் போவுதாம்! அவளை படிக்க வச்சது மகாபிசகாப்போச்சு. அந்தப்படிப்பி ஞலே வந்தகேடுதானே இதெல்லாம்! இல்லாட்டி அவபாட்டுக்கு செவனேண்ணு குலத்துத்தொழிலே செஞ்சிக்கிட்டிருப்பாள்ள?

பருவதம்:—இருக்கட்டும் பாட்டி;அவள் எங்கேயிருக்கிருள் சொல்லேன்?

தாய்க்கிழவி:—மாடிமேலே கட்டில்லே சாஞ்சு கெடக்கிரு போய்ப்பாரு.

பருவதம்:—(வெகுவிரைவாக மாடிக்குச்சென்று மாதவி படுத்திருக்கும் அறைக்குச் சமீபத்தில் மறைந்து சற்றுநேரம் நிற்கிருள்).

மாதவி:—(தனக்குள்) ஐயோ! இந்தஜென்மத்தை நான் இன்னமும் என் வைத்திருக்கவேண்டும்? கோவலா! உன்னை மறுபடியும் பார்க்கலாம், உன்னுடைய அன்பைப்பெறலாம் என்னும் நம்பிக்கை இருந்தாலும் இந்தப்பாழும் ஜென்மத்தை வைத்திருப்பேன். ஒருகுற்றமு மறியாத என்னை என் இப்படி வருத்துகின்ருய்? அன்பனே! போதுமடா! உன்னுடைய வர்மத்தை விட்டு விடடா! (மௌனம்).

பருவதம்:—(மெதுவாக அவளுடையஅறைக்குள் சென்று) என்னமாதவி! நிஷ்டையி லிருக்கிருய்? என்னேடு பேசலாகாதா? கோவலனுடைய தியானமே பெரியதியானமாக இருக்கிருய் போல்தோன்றுகிறது.

மாதவி:—(நாணத்தினுல் தலைகவிழ்ந்து சற்று நேரங்கழித்து) அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. எங்கே இவ்வளவு தூரம்? உட்காரு (ஒருநாற்காலியைக் காட்டுகிருள்.)

பருவதம்:—மாதவி. நீ செய்கிறதொன்றும் நன்ருயில்லை. கோவலன் போய்விட்டால் என்ன மோசமுழுகிப்போய் விட்டது? இதற்காக இப்படி வருத்தப் படுவார்களா? அடி பயித்தியமே!

மாதவி:—பருவதம்! நான் உன்னைக் கோவலன் விஷயமாக யோசனை கேட்கவில்லையே. நீயாக என் அநாவசியமாக அவர்விஷயத்தை எடுக்கிருய். வேறு பேச்சு இருந்தால் பேசு.

சகி:—(மாதவியிடம் வந்து) அம்மா! கௌசிகரை அழைத்துவரச் சொன்னீர்களே. இதோ அழைத்து வந்திருக்கிறேன். திண்ணையில் உட்கார்ந்திருக்கிருர். உள்ளே வரச்சொல்லட்டுமா?

மாதவி:—ஆ! அப்படியா!கௌசிகர் வந்து விட்டாரா!சீக்கிரம் இங்கே அழைத்துக் சொண்டுவா.(பருவதத்தை நோக்கி) பருவதம்! வந்திருக்கும் கௌசிக

ருடன் நான்சில சங்கதிகள் பேசவேண்டும். நாளைய தினம் வா. அவகாசமாய்ப் பேசிக்கொண்டிருப்போம்). இப்படிச் சொல்லுகிறேனே என்று வருத்தப்படாதே. தயைசெய்து மன்னிக்கவேண்டும்.

பருவதம்:—வருத்த மொன்று மில்லை; நாளைக்கு வருகிறேன். வந்த மனுஷாளைக்கவனிக்க வேண்டியது முக்கியமே ஒழிய நம்முடைய பேச்சு முக்கியமல்ல. நான் போய்வருகிறேன் (பார்வதி மாதவியை விட்டு நீங்குகிறாள். சகியும், கௌசிகரும் உள்ளே வருகிறார்கள்).

கௌசிகர்:—(உள்ளே வரும்போதே) "என்ன மாதவி! சௌக்கியமா? எப்படி யோகக்ஷேமங்களெல்லாம்?" (என்று கேட்டுக் கொண்டேவருகிறார்).

மாதவி:—(சந்தோஷத்தோடு) மாமாவாகிய தாங்கள் இருக்கும்போது எனக்கு என்ன குறை ஏற்படப்போகிறது? தங்களுடைய தயவுமட்டும் இருக்கவேண்டும். (சகியை நோக்கி) அடியே! மாமாவுக்கு தாகத்திற்கு நீர்மோர் கொண்டுவாடி! கிழப்பிராமணர் வெயிலில் வந்து களைத்துப்போயிருக்கிறார்.

கௌசிகர்:-என்னடி குட்டி! ஒருநாளுமில்லாத உபசாரம் செய்கிறாய்? என்னால் ஆகவேண்டியகாரியம் ஏதோ இருக்கிறதுபோலத் தெரிகிறது. அதனால் தான் இவ்வளவு உபசாரம்!

மாதவி:—மாமா! என்னைப் பரிகாசம் செய்வது பின்பு ஆகட்டும். உங்களால் ஆகவேண்டிய காரியம் ஒன்றிருக்கிறது. அது உங்களால்தான் முடியும்; அதை எப்படியாவது முடித்துவைக்க வேண்டும்.

கௌசிகர்:—என்னால் ஆகவேண்டியது என்ன அதைச்சொல்லு; பின்பு முடியும் முடியாதென்பதைப் பற்றிச் சொல்லுகிறேன்.

மாதவி:—உங்களால் முடியாத காரியமும் உண்டா! முடித்துத்தருவதாக வாக்குக் கொடுங்கள். பின்பு சொல்லுகிறேன்.

கௌசிகர்:—என்ன உபத்திரவப்படுத்துகிறாயே! சரி! முடித்துத் தருகிறேன் சொல்லு.

மாதவி:—(மேசையைத் திறந்து தான் ஏற்கெனவே எழுதிவைத்திருந்த கடிதத்தை அவர்கையில் கொடுத்து) மாமா! கோவலன் மதுரைநாடிச்சென்றிருக்கிறார். இந்தக் கடிதத்தை நீங்கள் அவரிடம் கொண்டுபோய்க் கொடுத்து அவரை இங்கு அழைத்து வரவேண்டும். அல்லது என்னை அவரிடம் அழைத்துக் கொள்ளும்படியான மார்க்கத்தைத் தேடவேண்டும். இதில் தான் உங்கள் சாமர்த்தியத்தைப் பார்க்கப் போகிறேன்.

கௌசிகர்:—பேஷ்! நல்ல உத்தியோகம் கொடுத்தாய். பிராமணகுலத்தில் பிறந்துவிட்டு இந்தப் புண்ணியமான வேலைக்குத்தானா வரவேண்டும்! (சகி கொண்டுவந்து கொடுத்த நீர்மோரை வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டே) காவிரிப்பூம்பட்டினம் எங்கே! மதுரை எங்கே! மதுரை உங்கள் வீட்டுக் கொல்லைப் புறத்தில் இருப்பது போல் சுலுவாச் சொல்லி விட்டாயே! என்னால் போக முடியாது.

மாதவி:—மாமா! மாமா! அப்படிச் சொல்லக் கூடாது. தயை செய்ய வேண்டும்; கிருபை புரிய வேண்டும் (அவருடைய கையைப் பிடித்துக் கொண்டு கெஞ்சுகிறாள்).

கௌசிகர்:—இதேது சங்கடமாயிருக்கிறதே! தெரியாத்தனமாய் உன்னிடத்தில் வந்து அகப்பட்டுக் கொள்ளுவேனா? நீ பல்லைக்காட்டுவதைப் பார்த்தால் பரிதாபமா யிருக்கிறது, என்ன செய்கிறது! சரி போய்வருகிறேன் (கடிதத்தை மடியில் வைத்துக் கொண்டு) வழிச்செலவுக்கு ஏதாவது கொடு.

மாதவி:--அதற்கென்ன? வேண்டியது தருகிறேன். இதைப் பெற்றுக் கொள்ளுங்கள் (ஐந்தாறு பொன் நாணயங்களை கௌசிகரிடம் கொடுக்கிறாள்).

கௌசிகர்:—நான் போய்வருகிறேன்! என்னமோ என்னால் கூடிய வரையில் பிரயாசைப்படுகிறேன்; முடிந்தால் உன் அதிர்ஷ்டம். முடியாவிட்டால் நான் என் செய்கிறது.

மாதவி:—என்ன மாமா! பரிகாசம் செய்கிறீர்கள்! பிழைப்பதற்காக நீங்கள் எங்களை நாடி இவ்வூருக்கு வந்துவிட்ட போதிலும் கும்பகோணத்து ஐயர்களுடைய சாமர்த்தியம் கும்பகோணத்தில் பிறந்த தங்களுக்கு இல்லாமல் போய்விடுமா! ஜெயத்துடன் திரும்பவேண்டும்.

கௌசிகர்:—நல்லது; போய்வருகிறேன். (மாதவியை விட்டிறங்கிச் செல்லுகிறார்).

மூன்றும் அங்கம் முதலாவது காட்சி
முற்றிற்று.

## Kannaki—A Social Drama.

## கண்ணகி.

அங்கம். 111] [காட்சி 2.

இடம்:—உறையூருக்குப் பக்கத்திலுள்ள ஒரு தோப்பு.

காலம்:—நண்பகல்.

பாத்திரர். { கண்ணகி. கோவலன். கௌந்தி.

கண்ணகி:—நாதா நாம் காலையிலேயே உறையூரை விட்டுப் புறப்பட்டு இன்னும் பாதிவழி கூட வந்தபாடில்லையே. வெயிலோ கடுமையாக எரிக்கிறது; கால் கொப்புளித்துப் போகிறதே! நாவோ உலருகிறது! என்னால் நடக்க முடியவில்லையே! ஆ அப்பாடா உஸ்! [மயக்கத்தினாலும் களைப்பினாலும் தள்ளாடுகிறாள்.]

கோவலன்:—பிராணகாந்தி! இன்னும் கொஞ்சதூரம் சிரமத்தைப் பாராமல் மெதுவாக நடந்து வா. அதோ தெரிகிறதல்லவா ஒரு புளியந்தோப்பு, அங்கு சென்று தங்கி சற்றுநேரம் இளைப்பாறி வெயில் தணிந்த பின்பு மறுபடியும் புறப்படுவோம் (தன்னுடைய மேல் வஸ்திரத்தினால் கண்ணகியின் முகத்தைத் துடைக்கிறான்).

கௌந்தி:—கண்ணகி! இப்போதாவது புத்தி வந்ததா; கோவலன் ஊரை விட்டுப் புறப்படும் போதே உன்னை வரவேண்டாமென்று சொன்னனே, அவனுடைய வார்த்தையைத் தட்டிவிட்டு வந்தாயே; அதனுடைய பலன்தான் இப்படி வந்தது! என்ன செய்யலாம்! புருஷன் வேண்டுமென்றால் வெயிலையும் மழையையும் பார்த்தால் சரிப்படுமா!

கண்ணகி:—(நாணத்தினால் தலை குனிந்தபடியே) தெரியாமற்றான் வந்து விட்டேன், என் மனம் இதோ காயும் சதிரவனின் மனதைப் போன்ற கல்மன மன்று. அதனால் வந்தேன்.

கோவலன்:—(புன்சிரிப்புடன்) உனது இளகிய மனம் உருகி நெற்றியெல்லாம் வியர்வை உண்டாகி விட்டது. சற்று வேகமாய் நடந்துவா (தன் கையைக் கொடுத்து அழைத்துச் செல்லுகிறான்).

கௌந்தி:—அம்மா கண்ணகி; இனி உன் கவலையை ஒழித்து விடு; இதோ நந்தவனத்தை நெருங்கி விட்டோம்?

கோவலன்:—(நந்தவனத்தை நெருங்கி) ஆஹா! என்ன அழகான நந்தவனம்! (கௌந்தியை நோக்கி) மாதா ஸ்ரீ! இந்த வனத்தைச் சுற்றிப்பார்த்து விட்டுப் பிறகு புளியந்தோப்புக்குச் சென்று தங்கலாமென நினைக்கிறேன். இன்னும் பொழுது இருக்கிறது; தங்களுடைய அபிப்பிராய மென்ன?

கண்ணகி:—ஆமாம் அப்படியே செய்யலாம். இந்த நந்தவனத்திலிருக்கும் பற்பல வகையான புஷ்பஜாதிகளையும், பறவைக் கூட்டங்களையும் பார்த்தால் இயற்கை யமைப்பின் அற்புதங்களும், கடவுளுடைய அருமைத் திருவிளையாடல்களும் இனிது விளங்குமல்லவா?

கௌந்தி:—கண்ணகிக்குச் சம்மதமானால் எனக்கும் சம்மதமே.

கோவலன்:—ஆனால் சரி வாருங்கள். (மூவரும் நந்தவனத்துக்குள் நுழைகிறார்கள்).

கண்ணகி:—சந்தோஷத்தினால் உடலும் உளமும் பூரித்து "கோவலா! இதோபார்த்தாயா பாரிஜாதம், அதோபார் மல்லிகைப் புஷ்பங்கள், ரோஜா, செண்பகம், இருவாட்சி, ஜாமந்தி புஷ்பங்கள் செடிகள் நிறையமலர்ந்திருக்கின்றன. பகுத்தறிவும், உணர்ச்சியுமில்லாத இந்த புஷ்பஜாதிகள் மனித சஞ்சாரமில்லாத இந்த இடத்தில் எவ்வளவு சந்தோஷமாயும் முகமலர்ச்சியாயு மிருக்கின்றன. அப்படியிருக்க, பகுத்துணர்வோடு கூடிய நான் கொஞ்சதூரம் வெயிலில் நடந்துவந்ததற்கு மிகவும் வருந்தி முகவாட்டமடைந்தேனே! என்னே! என்ன அறியாமை! இப்புஷ்பங்களுக்கு வெயிலும் ஒன்றுதான், மழையும் ஒன்றுதான். எல்லாம் இறைவனுடைய திருவிளையாடல் என்று நினைத்து அவைகள் வெயிலிலும் மழையிலும் காய்ந்தும் நனைந்தும் வருகின்றன. ஆனாலும் அவைகள் முகமலர்ச்சி யுடனேயே இருக்கின்றன. இப்புஷ்பங்களால் எனக்கு ஒரு நற்போதனை கிடைத்தது. சுகமுண்டாவதும், துக்கமுண்டாவதும் கடவுளுடைய செயல் என நினைத்துப் பொறுமையோடு சகித்துக்கொண்டு வருவதே அறிவுடையவர்களுக்கு அழகு என்னும் இந்த அருமையான நீதியை எனக்கு இதுவரையில்போதித்தவர்கள் ஒருவருமில்லையே. இப்புஷ்பங்களல்லவா எனக்கு இந்த நீதியைப் போதித்தன. முழுமணம்வீசும் முல்லைமலரே உனக்கோர் வந்தனம். மலர்முகமுடைய மல்லிகையே உனக்கோர் நமஸ்காரம். வன்புடைய பாரிஜாதமே உனக்கும் வந்த

னம். உங்களாலல்லவா நான் அரிய பெரிய நீதியைக் கற்றுக்கொண்டேன்.

கோவலன்:—புஷ்பங்களோடு நாளைக்கு வந்து பேசிக்கொள்ளலாம்; பொழுதுபோகும் சமய மாய் விட்டது; தோப்புக்குச் செல்லலாம் வா.

கௌந்தி:—கண்ணகி! இப்போதுதான் புஷ்பங்களின் இயற்கை அழகைக்கண்டு வர்ணிக்கிருள் நீ அசந்தர் அவளை அவசரப்படுத்துகிறய்.

கண்ணகி:—(சிரிப்புடன்) இயற்கை யழகுக்கு உள்ள வித்தியாசத்தை அவர் அறிந்திருந்தால் அவர் செயற்கையழகு செய்துகொள்ளும் தாசியாகிய மாதவியின் காலில்போய் விழுந்துகிடப்பாரா.

கோவலன்:—கண்ணகி நீதான் இயற்கை யழகுடையவள்; இப்போது திருப்தியாகிவிட்டதா.

கண்ணகி:—நான் அப்படிச் சொல்லிக்கொள்ளவில்லையே!

கோவலன்.—(சிரித்துக் கொண்டே) என்னை வீண்வம்புக்கு இழுக்கவேண்டுமென்று நினைக்கிருயோ?

கண்ணகி:—நான் வம்புக்கு இழுக்கிறேன் என்பதும் அல்லது மாதவியின் காதலன் வம்புக்கிழுக்கிருன் என்பதும் இதோ சமீபத்திலிருக்கும் கௌந்தியடிகளைக் கேட்டால் தெரியும்.

கௌந்தி:—அதெல்லாம் ஒன்றும் எனக்குத் தெரியாது. வாருங்கள் தோப்புக்குச் செல்லுவோம் (தோப்பைநாடிப் போகிருர்கள்).

கண்ணகி:—அம்மா! தோப்புக்குள் வந்துவிட்டோம்! இனி பயமில்லை! சத்விஷயமாக ஏதாவது சொல்லுங்கள் கேட்கலாம்!

கௌந்தி:—நீதான் சொல்லு! நான் கேட்கிறேன்.

கோவலன்:—கண்ணகியைத்தான் சொல்லச் சொல்லவேண்டும். அவள் அநேக சாஸ்திரங்கள் படித்தவ ளாயிற்றே!

கண்ணகி:—சத்திரத்து சோற்றுக்குத் தாத்தை யங்கார் உத்தாவோ! நான் சொல்வதற்கு ஒருவருடைய சிபார்சு என்ன?

கௌந்தி:—கண்ணகி! போதும் போதும்! வம்புக்கிழுப்பது கோவலனின் உண்மைக்காதலியா அல்லது மாதவியின் காதலனு என்பது இப்போது விளங்குகிறதே! நந்தவனத்தில் கேட்டசந்தேகம் இப்போது உனக்கு நிவர்த்தியாயிற்ற?

கண்ணகி:—அதிருக்கட்டும். தாங்கள் ஏதாவது ஒரு சத்விஷயத்தைப்பற்றிச் சொல்லுங்கள்.

கௌந்தி:—எதைப்பற்றிச் சொல்ல?

கண்ணகி:—எல்லாம்வல்ல சிவபெருமானின் அருளைப் பெறுவதெப்படி? அவருடைய பேரிலக்கணமென்ன? இவைகளைப் பற்றிச் சொல்லுங்களேன்!

கௌந்தி:—அவரிடத்தில் அன்புசெலுத்தினல் அவருடைய அருளைப்பெறலாம். அவர் செஞ்சடையும், வெண்ணிலவும் சிரசில் உடையவர். வெண்ணீறணிந்த மேனியுடையவர், இன்னும் என்ன சொல்லுகிறது?

கண்ணகி:—இப்போது தாங்கள் எனக்குத் தெரியும்படி விவரமாய் அந்தரங்க அர்த்தங்களை விளக்கிச் சொல்லவேண்டும்

கௌந்தி:—விவரமாய்ச் சொல்லவேண்டுமானல் இன்னொரு சமயம் சொல்லுகிறேன். நாழிகையாகிவிட்டது. நீங்களிருவரும் சமையல் செய்து சாப்பிட்டு விட்டுப் படுத்துக்கொள்ளுங்கள். மற்றக் காரியங்களை பொழுதுவிடிந்து கவனிப்போம்.

கண்ணகி:—சரி; அப்படியே ஆகட்டும்

3-வது அங்கம் 2-வது காட்சி

முற்றும்.

நாகை - C - கோபால கிருஷ்ணன்.



முக்கியக்கவனிப்பு:—சந்தாபாக்கியுள்ளவர்கள் தாமதமின்றி 17 - வது வாலியமுக்குள்ள சந்தாபாக்கியோடு, நடக்கும் 18 - வது வாலியமுக்குரிய சந்தாவையும் அனுப்பக்கோருகிறோம். அனுப்பாதவர்களுக்கு வழக்கம்போல் இனி எந்த சஞ்சிகையாவது வி. பி. பியில் அனுப்பப்படும். இதை விவேகசிந்தாமணி பெறும் எல்லாரும் தவருது கவனித்தறியக் கேட்டுக் கொள்கிறோம்.—பத்திராசிரியர்.

# * "Nature Study" And How to Do It.

"To educate is to give the child the power of self-expression and self - development."—*Motto adopted by the author of the little book.*

"Great men are they that see that spiritual is stronger than any material force."—*Emerson.*

"Consider the lilies of the field, how they grow."—*Christ.*

"The Elements of Nature are the mode of the Will of God."—*Hermes Trismegitus.*

"Now's the time to study hard ;
Work will bring its own reward
Then work, work, work! "

"Who would like an empty purse?
Empty brain would be still worse,
Then work, work, work! "

## "இயற்கை அறிவு."

"இளமையிற் கல்."

"முயற்சி திருவினையாக்கும்."

அறிவு, இயற்கையறிவு என்றும் செயற்கையறிவு என்றும் இருவகைப்படும். இயற்கை அறிவு தானாகத்தன்மாத்திரமாய் உண்டாவது. இது ஆத்மாவின் விருத்திஞானமென்றே சொல்லல்வேண்டும். செயற்கையறிவோ இயற்கையறிவைக்கொண்டு ஜடபதார்த்தங்களை விசாரப்படுத்திச் சேர்ப்பதனால் உண்டாவதாம். வீடு கட்டுதல், நாற்காலி மேஜைசெய்யல் முதலியன செயற்கையறிவினா லுண்டாவதாம். இயற்கையறிவு பூர்வஸம்ஸ்காரத்தினால் ஆத்மாவின் அநுபவஞானமாய் உதிப்பது. சூடுண்ட பூனை அடுப்பண்டைபோக அஞ்சுவது இயற்கையறிவு. க்ருடனைக்கண்ட பாம்பு தானாய் ஒடுங்குவதும் இயற்கையறிவேயாம். மனிதன் பிரகிருதியின் உண்மையையறிதல் இயற்கையறிவினாலேயாம். சுருங்கச்சொல்லில், அகமுகத்திலிருந்துதித்து பஹிர்முகப்பட்டு வருவது இயற்கையறிவாம். பஹிர்முகத்திலிருந்து பிரயத்தனபூர்வமாய் உள்ளே புகுந்து, பழக்க பலத்தால் செய்யத்தக்கதாவது செயற்கையறிவாம். இவையிரண்டிற்கும் பிரகிருதி, விகிருதி யெனப் பெயர். உதாரணமாக நாம் உயிரோடிருப்பதற்குக் காரணமான உச்சுவாஸ, நிசுவாஸரூபமான மூச்சுவாங்கலை யெடுத்துக்கொள்வோம்.

இந்த மூச்சுக்காற்றானது உள்ளேபோவதும், போனவிடத்தில் சற்றுத்தங்குவதும், பிறகு வெளியே நிசுவாஸமாக வருவதும், வெளிப்போனபின் சற்றுத்தங்குவதுமாக விருக்கிறது. இதற்குப் பூரகமென்றும், (காற்றை உள்ளேயிழுத்துப் பூரித்தல் - நிறைத்தல்), ரேசகமென்றும் (காற்றை வெளியே தள்ளிநிற்றல்), கும்பகமென்றும் (போக்குவரத்தில்லாமல் நிலையாய் நிற்றல்), பெயர். மூச்சுக்காற்றின் போக்கு, வரத்து, நிற்றல் ரூபமான இந்

* "How to do Botany (Nature Study) and Gardening in Elementary schools." By N. Swaminathan, Sub-assistant Inspector of Schools, Madras, 1910. 4 as.

தச் செயல்களுக்குப் பிரணுயாமம் என்று பெயர். பிராணன் - மூச்சுக்காற்று, யமம் - வசப்பாடு. இதற்குத்தமிழில் "வாசிவசம்" என்று பெயர். வாசி யென்றால் பிராணவாயுவுக்கும் குதிரைக்கும் பெயர். பிராணன் மனோரூப ஜீவனுக்குக் குதிரையைப்போல் வாஹனமாயிருப்பதால் அதற்கு வாசி யென்னும் பெயர் இருவிதத்திலும் பொருத்தமே.

"வாசிவசம்" என்று சொல்கிற இந்தப் பிராணுயாமம் கூட இயற்கை, செயற்கை யென்கிற இருவித பிரிவினிற்குட்பட்டிருக்கும். இயற்கை - தானாக நடத்தல், செயற்கை - ஒன்றைப்பார்த்துப் பிரயத்தன பூர்வமாய் நடத்தல். இது சம்பந்தமாய் எம்பெருமான் ஸ்ரீ ஸதாசிவயோகீந்திரர் சொல்லியிருப்பதைக் கவனிப்போம். அவர்சொல்லியிருக்கிறபடி,—

"பிராணுயாமம், பிராகிருதமென்றும் வைகிருதமென்றும் இருவிதமாகும். இவையிரண்டுமல்லாமல் நின்றது கேவலகும்பகம்" என்கிறார். இவைகளில் "பிராகிருதப் பிராணுயாமமாவது, பிராணவாயு நிஸ்வாச உச்சுவாசரூபமாய் ஸ்வபாவமாகவே (தானாகவே) போக்குவரத்தாயிருப்பது. இது சகல ஜனங்களுக்கும் நடக்கிறது."

"வைகிருதப்பிராணுயாமமாவது, சாஸ்திரங்களிற்சொன்னவிதிப்படிரேசக பூரக கும்பகங்களின் கிரமமறிந்து வாயுவை நிறுத்துதல்."

"இந்தப் பிராகிருதம் வைகிருதம் என்கிற இரண்டும் எந்த மஹாத்மாவுக்கு க்ஷணமாத்திரத்திலே சித்தியாமோ அதுவே கேவலகும்பகமென்று சொல்லப்படும்."

இதில் முதலாவதான பிராகிருதம் "மௌனமந்திராதிக்யவித்யையின் பயனுன" அஜபா மந்திரயோகமாம். இரண்டாவதான வைகிருதம், பிரயத்தனபூர்வமான செயற்கையின் பயனுன லயயோகமாம்.

மூன்றுவதான கேவலகும்பகம் (வாயு மனதோடுகூடி ஸ்திரமாய் நிற்கின்றபடியால்,காரிய காரண ஐக்கியரூப) ஹடயோகமாம்.

இந்த மூன்று விதமான செயலுக்கும், (இயற்கை, செயற்கை, கேவலம் என்கிற பெயரோடுகூடி) தான், நான், தானவன் என்கிற சப்தார்த்தங்களின் லக்ஷியங்கள் கர்த்தாவாயிருக்கும்.

தான் என்னும் சப்தார்த்தத்தின் மந்திர (அந்தர்) லக்ஷியம் ஆத்மா.

நான் என்னும் சப்தார்த்தத்தின் மந்திர (அந்தர்) லக்ஷியம் அஹங்காரபுருஷன்.

தானவன் என்னும் சப்தார்த்தத்தின் மந்திர (அந்தர்) லக்ஷியம் பிரஹ்மாத்மஐக்கிய ஸ்வரூபனுன யோகி.

"அப்ராப்தப்ராபணம் யோகஃ" என்ற வாக்கியப்படி, இந்த யோகிக்குப் பெறலரும்பேறுகளெல்லாம் சித்திக்கும்.

இது பிராகிருதஞானம் என்று சொல்லும் இயற்கையின் சுவபாவத்தை அறியும் சின்மய, சிதானந்த அறிவாம்.

இப்பொழுது "இயற்கை அறிவு" என்னும் பெயர்புனைந்து நம்பார்வைக்கு வந்திருக்கும் சிறு புஸ்தகத்தின் கருத்தை நூலாராய்ச்சி முறைபற்றி விசாரிப்போம், இது சென்னை ஸப்-அஸிஸ்டெண்ட் ஸ்கூல் - இன்ஸ்பெக்டர் ம-ா-ா-ஸ்ரீ, என். ஸ்வாமிநாதய்யர் அவர்கள் "இயற்கையறிவு சம்பந்தமாகத் தாவரநூலும் தோட்டவேலையும் எலிமெண்டெரி பாடசாலைகளில் கற்கும் முறை"யை விளக்கிக்காட்ட வேண்டி இயற்றியதோர் 76-பக்கங்கள் கொண்ட சிறு புஸ்தகமாம்.(இதன் விலை அணு 4.)

இங்கே "இயற்கையறிவு சம்பந்தமாக" என்றதற்கு வாச்சியார்த்தம் செய்திருப்பது, நாம் மேலே விவரித்தெழுதியதற்குச்சற்று மாறுகத்தோற்றும். இங்கே "இயற்கை அறிவு

என்பது "பிரகிருதி ஞானம்" என்னும் ஸம்ஸ்கிருதவாக்கியத்தின் அர்த்தத்தைத் தமிழில் தெரிவிப்பதற்கானதோர் மொழிபெயர்ப்பாக உபயோகப்படுத்தப்பெற்றிருக்கிறதாக திருவள்ளூர் டிப்டிகலெக்டர் ம-ா-ா-ஸ்ரீ, ஜெ. தர்மாங்கராஜா அவர்கள் எழுதியிருக்கும் முகவுரையிலிருந்தும், நூல் விஷயத்திலிருந்தும் விளங்குகிறது. ஆனால் சற்று ஊன்றி விசாரிக்கில், "இயற்கை அறிவு" என்பது "இயற்கையின் அறிவு" என்பதின் தொகுத்தல் விகாரமாகவிருக்க வேண்டுமென்று நன்றாய் விளங்குகிறது. "இயற்கை அறிவு" என்பது அப்படி தொகுத்தல் விகாரமாயில்லாமற்போனால் இயற்கையினுனே அது "இயற்கையான அறிவு" என்று விரியும். அதாவது, செயற்கையறிவில்லாத இயற்கையறிவு என்றே பொருள்படும். செயற்கையறிவு என்பது "Conventional Knowledge" என்று ஆங்கிலத்தில் பெயர் பெறும். இங்கே யொன்று நன்றாய்ச்சிந்தித்து ஊன்றியுணரத்தக்கது. அது என்னவெனில் வித்யையின் இருபகுதிகளாம். வித்தை யென்பது சுத்தவித்தை யென்றும் அவித்தை யென்றும் இருவகைப்படும்.

சுத்தவித்தை யென்பது அவ்யக்தப்பிராகிருதமானது: அதாவது பொறிபுலன்களுக்குத் தோற்றாது தன்னளவாய்த்தானே பரிணமிப்பதாயிருப்பது. இதை ஈசுவரசிருஷ்டியென்றும்; ஈசுவர சங்கல்பத்தைக் காரணமாகக்கொண்டு உற்பத்தி ஸ்திதி லயவிருத்தி நிவிருத்திகளுக் குட்பட்டதென்றும் சொல்லுவர் மேலோர்.

அவித்தை யென்பது வியக்த வைகிருதரூபமானது: அதாவது, பொறி புலன்களுக்குத் தோற்றுவதாய் இயற்கையின் விகாரப்புணர்ச்சியாலுண்டாகித் தோற்றுவதும் மறைவதுமாயுள்ளதாம். மேஜை நாற்காலி செய்வது முதல் இந்திரஜாலம் மஹேந்திரஜாலமீறுகவுள்ள வித்தைகளெல்லாம் அவித்தை காரணமாக, அவித்யாசம்பந்நனுன (சிதாபாஸ) ஜீவனுடைய சங்கல்ப விசேஷத்தால் இயற்கை விதிக்குட்பட்டுச் செயற்கை விதிகாரணமாக உற்பத்தி ஸ்திதி லயங்களுக்குட்பட்டதாக சொற்பகாலத்துக்கு மட்டும் விளங்கி யொடுங்குவதாம். உதாரணமாக, 'மரயானை' யென்பதில்,—

மரம்.—ஈசுவர சங்கற்பத்தினு லுண்டான சுத்த வித்யாரூப பிராகிருத சிருஷ்டி.

யானை.—அந்த மரத்தின் விகாரத்தினுல் அமைக்கப்பட்ட மதயானை ரூபமான வாஹனம், ஜீவனுடைய சங்கல்பத்தினு லுண்டான அவித்யாரூப வைகிருத சிருஷ்டி.

பிராகிருதமான மரத்துக்கும், வைகிமான (அம்மரத்தின் விகாரரூப)மதயானைக்கும் உள்ள சம்பந்தமென்ன?

ஒன்று அவ்யக்த ப்ராகாரமாய்ச் செய்யப்பட்டது. மற்றொன்று வியக்த விகாரமாய்ச் செய்யப்பட்டது.

ஆயினும் இவையிரண்டும் ஒன்றை ஒன்று மறைக்கும் "ஆவரணசக்தி" வாய்ந்துள்ளன.

மரத்தினுல் செய்யப்பட்ட மதயானை யொன்றை நாம் பார்த்து அதன் ரூபநாமத்தை மனதில் வாங்கிக்கொள்ளும்போது அது மரம் என்பதை நாம் மறந்துவிடுகிறோம். யாதொன்று மரம் என்கிற ஞானத்தை (அறிவை) உள்ளிருந்து மறைக்கிறதோ அதுவே ஆவரணசக்தி யென்று சொல்லப்பெறுவது.

மரத்தாலானதோர் பெரிய மதயானையை நாம் மனத்தால் கிரகிக்கும்பொழுது, அதற்கு உபாதிகாரணமான மரம் முன்போலவேயிருப்பினும், யானையின் நாமரூபத் தோற்றமான விகாரஞானம்(வைகிருத கிராஹியசக்தி) "அது என்ன தான் நாமரூபத்தோற்றத்தினுல் விகாரமடைந்தாலும், அந்த விகாரங்களுக்கெல்லாம் ஆதாரபூதமாயுள்ள மரம் மரமாகவேயிருக்கிறதென்னும்" ஸ்வபாவஞானத்தைப் (பிராகிருத

கிராஹிய சக்தியை) மறைத்துவிடுகிறது. இந்த மறைப்பு எதனாலுண்டாகி அதன்பயனாய் "அது மரமே" என்கிற ஞானம் மறக்க நேரிடுகிறதோ அது ஆவரணசக்தி. இந்த ஆவரணசக்தியை உள்ளாய்ந்து அறிந்தவன் யாரோ அவனே "ஆத்மஞானி;" அதாவது, தன்னையறிந்தவன்.

"தன்னையறிந்தவன் தலைவனுவன்" என்கிற வாக்கியப்படி இந்த ஆத்மஞானி எல்லாருக்கும் தலைவனென ஈசுவரனுக் கொப்பாய், ஸ்வானுபவ முதிர்ச்சியில் விதேககைவல்யனுகும்பொழுது ஈசுவரனே யாவன். இதுதான் ஜன்மசாபல்லியம்—மனுஷஜன்ம மெடுத்ததற்கான நல்லபலன். இவ்வளவு தூரம்விரித்துரைத்து விளங்கவைத்ததை யெல்லாம் எம்பெருமான் திருமூலதேவர் ஓரே திருமந்திரத்தில் வெகு அழகாய்ச் சுருங்கச்சொல்லி விளங்கவைத்திருக்கிறார்:

'மரத்தை மறைத்தது மாமதயானை
மரத்தில் மறைந்தது மாமதயானை
பரத்தை மறைத்தது பார்முதற்பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதற்பூதம்."

—திருமந்திரம்.

இந்த ஆவரணசத்தியானது வித்துக்குள்ளிருக்கும் மரத்தை மறைக்கிறது; அப்படியே மரத்துக்குள்ளிருக்கும் வித்தையும் மறைக்கிறது. இதைக்கேட்ட ஒரு கற்றறிமூடனை வித்வான், இவ்விரண்டினுள்ளுமிருந்துகொண்டு அடிமுடி தெரியாது 'காரிய காரண தோரணையை' மறைக்கும் ஆவரணசக்தி யென்னவென்று விசாரிக்கப்புகாது, விவேகசூன்யத்தினுல் 'மரத்துக்கு வித்துக்காரணமா, வித்துக்கு மரம் காரணமா?' என்று விசாரிக்கத் தொடங்கி காரணகாரியமான வித்தையும் மரத்தையும் புரட்டிப்புரட்டி விசாரித்து வித்திலிருந்து மரமும் மரத்திலிருந்து வித்தும் உண்டாவதைக் கண்டுமயங்கி இதற்கிது காரணமென்று சொல்லத்தெரியாமல் புத்திகலங்கி சித்தப்பிரம்மை கொண்டு "மரத்திலிருந்து வித்துண்டாயிற்று? வித்திலிருந்து மரமுண்டாயிற்று?" சொல்லுலாயிற்று இல்லாவிட்டால்வழி விடேன் என்று வழியில் போகிறவர்களை யெல்லாம் வழிமறித்துக் கேட்டுக்கொண்டு நிற்க, ஒவ்வொருவரும் காரியார்த்தமாய்ப் போகிறவர்களாயிருந்தபடியால் இவனோடு மன்றாடிக்கொண்டு நிற்கப்பொறுமல் பித்துக்கொண்ட வித்வானைப் பிடித்துச் சாலையிலுள்ள மரம் ஒன்றில் பின்கட்டுமுறையாய்க்கட்டி விட்டு, "மேலேபார்த்து அந்தமரத்தைக்கேள், அதிலொரு ஜடாமுனியிருக்கிறது: அது சொல்லும்!" என்றுபோதித்துவிட்டுப் போயினர்கள்—என்றொருகதையுண்டு.

அக்கதைப்படி, அந்தபயித்தியக்கார வித்வான் "ஹே ஜடாமுனி என்கேள்விக்கு பதில் சொல்லுகிறாயா இல்லையா?" என்று அலட்டிக்கொண்டிருக்க அவன் கருவிகரணங்களெல்லாம் அலுத்துச்சலித்து அயர்ந்து ஒடுங்கிப்போக, முடுக்கிவிட்ட யந்திரம்போல், அவன் தன் கேள்வியை மட்டும் கேட்டுக்கொண்டு மற்றப்படி பஹிர்முகவிர்த்தி யெல்லா மொடுங்கி சித்திரப் பதுமைபோல் நின்றுகொண்டிருந்தான். இவனுடைய இந்த மேலான அவஸ்தையைக் கண்ட ஒரு மஹரிஷியானவர் அவருடைய ஞானதிருஷ்டியினுல் இவனுடைய கேவலகும்பக அவஸ்தையை யறிந்து, அவனது கைக்கட்டு, கால் கட்டுகளையெல்லாம் தரித்து, முடிச்சுகளை யெல்லாம் அவிழ்த்து விட்டும் அவன் பஹிர்முகப் படாமல் தானே தான்கேட்ட கேள்வியையே கேட்டுக்கொண்டு நிற்க, பெரியவர் மிகவும் இரக்கங்கொண்டு, "ஐயோ இவனுடைய கேவலகும்பகம், பிராகிருதம், வைகிருதம் என்கிற இரண்டு விதமுமின்றி ஹடாத்காரத்தினுல் சித்தித்ததென்றுணர்ந்து, இதுவும் மனமடங்க ஒரு வழிதானென்று க்ஷணமாத்திரத்தில் ஊகித்தறிந்து கொண்டு, அவனுக்கு முன் நின்று, "நீ கூவிபறைந்த ஜடாமுனி நான்

தான். என்னையேன் இப்படி அலட்டி உபத்திரவம் செய்கிறாய்?" என்று கன்னத்தில் பளீர் என்று ஒரு அறை கொடுக்க, அந்த மூடவித்வான் கன்னத்தைத் துடைத்துக்கொண்டு "நான் கேட்ட கேள்விக்கு பதில் சொல்! இல்லாவிட்டால் உன்னை விடமாட்டேன்" னென்று முன்போல் வழியை மறைத்துக்கொண்டு நின்றான்.

"நீ உண்மையறிய என்ன செய்தாய்?" என்று ரிஷியாகிய "ஜடாமுனி" அதட்டிக் கேட்க, அதற்கு அவன், "இந்தமரம் நான் வைத்துப் பயிராக்கினதுதான். வித்திலிருந்தே யிது உண்டாயிற்று"—என்று சொல்லி முடிக்குமுன்,

"நல்லது! இந்த மரத்தின் வித்தொன்று கொண்டுவா!" என்று "ஜடாமுனி" பின்னும் அதட்டிச்சொல்ல, அந்த மூடவித்வான் சூத்திரப்பதுமை போல் தன்மடியிலிருந்த பையிலிருந்து ஒரு வித்தை யெடுத்துக்கொடுத்தான்.

அதை யவர் உற்றுப்பார்ப்பவர்போல், வாயில் போட்டு விழுங்கி ஜாடராக்னியினால் தஹித்துவிட்டு, மறுபடியும் அதை வாயால் தானே வெளியேற்றி அவன் கையில் கொடுத்து, "இந்தவித்தை முன்போல் முளைக்கவை பார்ப்போம்!" என்றார்.

"இதோ பார்!" என்று முளைக்கவைத்தான். அது முளைக்க எத்தனை நாள் செல்லுமோ அதைப்போல், இருமடங்கு மும்மடங்கு காலம் பொறுத்துப்பார்த்தான். வித்து முளைக்கவேயில்லை!

"ஓஹோ! காரியம் கெட்டுப்போய்விட்டதே!" யென்று "ஜடாமுனி" காலில்விழுந்து இந்த வித்து ஏன் முளைக்கவில்லையென்று வெகு விநயமாகக் கெஞ்சிக் கூத்தாடிக்கேட்டான்.

அதற்கு அவன் பார்வையில் "ஜடாமுனி" யாகத்தோன்றி நின்ற மஹரிஷியானவர், "இன்னொருவித்து இருந்தால் எடு!" என்று அதட்டிச்சொன்னார்.

அதையும் முன்போல் வாயில் போட்டுக்கொண்டு தன் அமிர்தவருஷத்தால் அதை நனைத்து இந்த வித்தை முளைக்கவை பார்க்கலாமென்று கொடுத்தார்.

அதையும் முன் போலவே செய்ய அது மூன்றேமுக்கால் நாழிகைக்குள் முளைத்துக் கிளைத்துச் சிறுதளிர்விட்டு நின்றது. மூடவித்வான் அதிசயித்து, "இந்த வித்து முளைப்பதற்கும் முளைக்காததற்கும் காரணம் நீர்தான். உம்மையறிந்துகொண்டால் இரகஸியம் தெரிந்து விடும்! நீர்தான் என்னைக்காப்பாற்றவேண்டும்" என்று காலில் விழுந்து அவர்காலை கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டான். இதுதான் சமயமென்று அந்த மஹரிஷியானவர், அந்த மூடன் தன்னை ஜடாமுனியாகவே அறிந்து காலில் விழுந்தானுதலால் அப்படியே அவனுக்கு அனுக்ரகம் செய்யக் கிருபைகூர்ந்து, குப்புறவிழுந்து காலைப் பிடித்துக்கொண்டு விடமாட்டேன் என்று ஹடம் செய்தவன் முதுகில் 'படார்' என்று பிசாசு அறைந்தாற்போல் ஒரு அறைகொடுத்து அவன் மூர்ச்சித்துப்போக, அந்த அவசரத்தில் "ஐம் பீஜம் ஹ்ரீம் சக்திஃ, ஸ்ரீம் கீலகம்; ஸ்ரீயை நமஃ ஓம் இதிகாரணம்" என்று அவன் வலது காதில் முந்திரோபதேசம் செய்து உடனேதாரகோபதேசமுஞ் செய்துபோக, அவன்மூர்ச்சைதெளிந்து, பீஜம், சக்தி, கீலகம் சஹிதமானமந்திரத்தை ஜபமாகவுள்ளத்தில் தியானம்செய்து, அவனது ஏகாக்ரசித்தத்தின் அதியற்புதமான மநநநிதித்தியாஸன சக்தியால் வெகுசீக்கிரத்தில் அவனுக்கு மந்திரயோகம் சித்திக்க, மந்திரசித்தி பெற்ற அவன், "ஸ்ரீயை நமஃ" என்னும் அஜபாமந்திர அவ்யக்தகாயத்ரியுபாசனையினால், ஸ்ரீகுரு தரிசனம் பெற்றவனாகி, "ஓம் இதிகாரணம்" என்ற மஹாவாக்கியத்தின் வாச்சியார்த்தமுணர்ந்து, அதன் லக்ஷியார்த்தத்தை குரு

முகமாகவே விசாரித்தவனாகக் கடைசியில், "ஸ்ரீகுரு:ஸர்வகாரணபூதாசக்தி:" என்னும் ஸ்ருதி வாக்கியத்தின் லட்சியம் சித்தித்து அந்த ஸ்ரீகுருவின் "சின்முத்ரார்த்த லக்ஷியமே" "ஓம்" என்று ஐயந்திரிபறவுணர்ந்து, தான் ஹடாத்காரத்தினால் காரணபூரணனை விசாரித்துப் பூரணகாரணனானபடியால், தான் கைவல்யசித்திபெற்ற மார்க்கத்திற்கு "ஹடயோகம்" எனப் பேர்பெற்று உலகில் அது பிரசித்தியடையவேண்டுமென்று "ஆதிகுருவான தக்ஷிணாமூர்த்தியைப் பிரார்த்திக்க" கல்லால நீழலிலமர்ந்துள்ள கருணைமுகிலாம் அந்தப் பகவானும் "அப்படியே ஆகுக" வென்று ஆசிர்வதித்து"ஹடயோகத்தை" அந்தத் தற்பரனை சற்சீஷனுக்கே சாங்கோபாங்கமாக உபதேசித்தருளினரென்பது நைமிசாரண்யத்தில், நடந்ததோர் பூர்வோத்தரமான விருத்தாந்தத்தின் கதை..

அதிலிருந்து, தாவரநூலிலிருந்து ஹடயோகமுண்டாயிற்றென்றும்; ஹடயோகத்திலிருந்தே தாவரநூலுண்டாயிற்றென்றும் சொல்லி மயங்கிப்பிறரையும் மயக்குறச்செய்வோர் பலர் உளர். அப்படிப்பட்ட மயக்கங்களிலொன்று "இயற்கை அறிவு" என்பதின் வாச்சியார்த்தம் அதன் லக்ஷியார்த்தத்தை யுணர்ந்தால் வாச்சியார்த்தத்தின் மயக்கம் தானே மங்கும்: அப்படியெனில்,"மயக்கறும்" என்று கொள்க.

"மனமாயைமாயையிம் மாயைமயக்க
மனமாயைதான்மாயுமற்றென்றுமில்லை."

என்பது திருமந்திரோபதேசம். இச்சிறுநூலியற்றிய ஸப்-அஸிஸ்டெண்ட் ஸ்கூல்-இன்ஸ்பெக்டர் அவர்கள் உபாத்தியாயர்களுக்குப்போதனையாகச் சொல்லியிருக்கும் முன்னுரையில், "மலையளவு அறிந்தால் தான் கடுகளவுதிறமையுடன் போதிக்கக்கூடும்" என்ற உண்மையான கருத்தை உபதேசமாகக்கொண்டு,கடுகளவான "தாவரநூலும் தோட்டவேலையும்" என்னும் "பிரகிருதிஞானபோதகமான" இச்சிறுநூலின் கடுகளவு "இயற்கை அறிவை"க் கொண்டு மலையளவான மூலகாரணத்தை ஆராய்ந்துணர்ந்து "ஓம் இதியேகாக்ஷரம் பிரஹ்ம: ஓம் இதியேகாக்ஷரம் பரம்" என்னும் மஹாமேருவான பரஞானத்தைப் பற்றும் வழிகாட்டினேம்.

இச்சிறுநூலின் போதனையை உள்ளபடியாய்ந்துணர்ந்து அதன் தத்துவத்திற்புகுந்து "தத்துவமெங்குண்டு தத்துவனங்குண்டு" என்னும் திருமந்திரோபதேசப்படி, தத்துவத்தில் தத்துவனைக்காணும் வகையறிய விரும்புமுபாத்தியாயர்கள் 1893-ம் வருஷம் செப்டம்பர் மாசத்து விவேகசிந்தாமணி சஞ்சிகையில், * "பிரகிருதியினுண்மையில் பரமனைக்காணலாம்" என்னும் விஷயத்தையும், இயற்கையின் அறிவைக்கொண்டு குழந்தைகளின் இயற்கையறிவு விர்த்தியாகப்பார்க்க ரசிகமான கிண்டர்கார்டன் கதை சொல்லும் விதம் கற்றுக்கொள்ள விரும்புகிறவர்கள், மேற்சொன்ன விஷயத்தோடு, விவேகசிந்தாமணியின் முதல் வருஷங்களில், இச்சிறு நூலின் முகவுரை ஆசிரியரான ம-ா-ா-ஸ்ரீ, ஜெ. தர்மரெங்கராஜா அவர்களால் எழுதப்பெற்ற 'தண்ணீர் சொல்லியதன்வரலாறு' என்பதையும் மாதிரிக்குப் படித்துப்பார்ப்பது உசிதமாயும் நல்லறிவு பெறுவதற்கு உத்தமசாதனமாகவுமிருக்குமென்பதைச் சுட்டிக்காட்டலானேம்.

ஓம் தத்ஸத்.



---

* See Vol 12, No. 5 of the Vivekachintamani. "Through Nature to God"—A Kindergarten Sermon on Nature Study. And also: The Autobiography of Water by J. Dharmaranga Raju in the December No: of the Vivekachintamani for 1892, (Vol, I, No. 8.)

## An Appeal to Agriculturists - II.

## வியவசாயிகளுக்கோர் அறிக்கை - II

(முன் தொடர்ச்சி.)

### குடித்தனமே துரைத்தனம்.

ஒருகாலத்தில் ஒரு சபைகூடியிருந்தது. அச்சபையில் அரசன் ஒரு உன்னதமான ஆசனத்தில் வீற்றிருக்க அவனைச்சுற்றி ஒரு வக்கீல், ஒரு வர்த்தகன், ஒரு வைத்தியன் இவர்கள் உட்கார்ந் திருந்தார்கள். அரசன் "நான் உங்கள் எல்லோரையும் ஆள்கிறேன் என்றான். தன்மேலுள்ள இரத்தினாபரணங்கள் ஜ்வலிக்கப் பட்டுஉடைகளில் சரிகைவரிசைகள் பிரகாசிக்க எழுந்து நின்றுகொண்டு! பிறகு வக்கீல் எழுந்து தனது நாலுகைச்சட்டையை இழுத்துவிட்டுக் கொண்டு நான் கச்சேரிகளில்வாதம்செய்து உங்களுடைய வியாச்சியங்களை முடித்துக் கொடுக்கிறேன் என்றான். வர்த்தகன் தனது சூனவயிற்றைத் தடவிக்கொண்டு நான் உங்களுக்கெல்லாம் வேண்டிய பதார்த்தங்களை வைத்து வியாபாரம் செய்கிறேன் என்றான். வைத்தியன் தான் கைபார்க்கவைத்திருந்த பட்டுக் கைக்குட்டையை உதறிக்கொண்டு நான் உங்களுக்கெல்லாம் வைத்தியம் பார்த்து வியாதிகளை சொஸ்தம் பண்ணுகிறேனென்றான். கடைசியாய் ஒரு மூலையில் தானிருந்தவிடமே தெரியாமல் தோலுமெலும்புமாய் உட்கார்ந்திருந்த ஒருகுடியானவன் எழுந்து ஹீனஸ்வரத்துடன் நான் உங்களுக்கெல்லாம் உணவளித்துப் பட்டினியினால் சாகாமல் காக்கிறேனென்றான். மேற்சொன்ன பேர்களில் எவர்கள் இல்லாமற் போனாலும் மனிதன் கஷ்டத்துடனாவது ஜீவிக்க ஹேதுவுண்டு. குடியானவர்களில்லாமல் ஒரு வருஷம் மாகுல் விளையாமற்போனால் எல்லோரும் பட்டினியினால் மடியவேண்டி வருமல்லவா? ஆதலால் "குடித்தனமே துரைத்தனம்" என்பதற் கிணங்க பயிர்செய்து ஜீவிப்போர்கள்தாம் சுகியென்பது அநேகாது அபிப்பிராயம்.

### பட்டினவாச லட்சணம்.

நாம் ஆழ்ந்துயோசித்துப் பார்க்கின், ஒரு குடியானவனுக்கிருக்கிற சுகம் ஒரு உத்தியோகஸ்தனுக்கில்லையென்பது நன்கு விளங்கும். உத்தியோகஸ்தனுக்கு ஏராளமான பணம் வருகிறது, வேண்டிய சௌகரியங்களைத் தேடிக் கொள்ளலா மென்பது வாஸ்தவமே ஆனால் இயற்கையாய் அனுபவிக்கும் சுகம் அவனுக்கில்லை. ஏனெனின் அவன் பட்டினங்களில் வசிக்கவேண்டி யிருக்கிறது. நாலு பக்கங்களிலும் சாக்கடைக் கும்பியின் வாசனையும், கக்கூசுகளினின்றெழும் நாசிகளைக்கெடுத்து வாந்தியை உண்டாக்கும் வாசனைகளும், கிராமங்களிலேயும் தோட்டங்களின் மத்தியிலேயும் வசிக்கும் குடியானவர்களுக்குப் பட்டினம்சேர்ந்தால், இவ்வூரை விட்டு எப்பொழுது அகலுவோமென்ற எண்ணத்தை உண்டாக்குகிறது. ஏனெனின் நாலுபக்கங்களிலுமுள்ள செடிமரங்களால் கரியமலவாயு உட்கொள்ளப்பட்டு பிராணவாயுவுடன் கூடிய காற்றை உட்கொண்டும், தினம் தினம் அடிவரையில் இறைக்கப்பட்டதால் மிக்க சுத்தமாயும் கரும்புபோன்றுமுள்ள நீரை உட்கொள்வதாலும், ஆரோக்கியமாய் இருந்துள்ள தேஹத்துடன் கூடினவர்களுக்கு, ஜனநெருக்கத்தாலும், வெகு நாளாய்த் தேக்கிவைக்கப்பட்ட ஜலத்தின் உபயோகத்தினாலும், சாக்கடை, கக்கூசு முதலிய இடங்களினின்று கிளம்பும் நாற்றத்தினாலும், கொசுக்கூட்டங்களின் கடியினாலும், வீதியில் சென்றால் அமைதியாய்க் காலம்கழித்தவர்களது செவிகள், இங்குமங்கும் ஓடும்வண்டிகள் ஜனங்களது சப்தங்களால் அடைத்துப்போய், வீதியினின்றெழும் புழுதியினால் சுவாசம்விடமாட்டாமல் திக்குமுக்காடும்படி நேர்வதும் அவர்களை அவ்வூரைவெறுக்கச் செய்வது ஆச்சரியமோ?

### நாட்டுப்புறவாசச் சிறப்பு.

வெயிலிற் சென்றவர்களுக்குத்தான் நிழலின் அருமை தெரியும் என்பதற்கிணங்க, பட்டினங்களில் பணங்களின் செலவினால் என்னதான் சௌகரியங்களை ஏற்படுத்திக்கொண்டிருக்கினும், தட்டுக்கெட்டு ஒரு தரம் தோட்டங்களுக்குப்போய் அதன் மத்தியில் பங்களாப்போன்ற கட்டிடத்தில் நாலாபக்கங்களிலும் பயிர்களும்,செடிகளும் பச்சைப்பசேலென்று காண பட்டினங்களிலுள்ள மாடுகளைப்போல் கண்டவைகளையெல்லாம் தின்னாமல் பசும்புற்களை மாத்திரம் தின்றிருக்கும் பசுக்களின் பாலின் ருசியை அநுபவித்தறிந்து தேஹஆரோக்கியத்திற்கு அப்பேர்ப்பட்ட இடம் எவ்வளவு சிலாக்கியமானதென்று சுகாதார விளக்கத்தின் உணர்வினால் நன்கறிந்த உத்தியோகஸ்தர்களும், அக்குடியானவனது நிலைமையைப் பற்றிப் பொறாமையடைந்ததுண்டு.

## எருழுதுண்பான் இறகுபிடித்துழல்வான்.

நம் வாலிபர்களில் பெரும்பாலார் தங்களுக்கு இயற்கையிலேயே நிலங்கள் யதேஷ்டமாயிருந்து மேற்சொன்னபடி சுகமாய்க் காலம்சழிக்க சந்தர்ப்பமிருக்கினும், தம்நிலங்களை அறிவில்லாத ஆட்களினிடம் கிடைத்தது போதுமென்று குத்தகைக்கோ அல்லது சாகுபடிக்கோ விட்டுவிட்டு, பட்டினங்களில் எதாகிலும் ஒருகச்சேரியில் பதினைந்து ரூபாய் குமாஸ்தாவாக வேலைக்கமர்ந்து, தனது அல்பமான சம்பளத்தால் அவ்விடம் வேண்டிய சௌகரியங்களைச்செய்துகொள்ளவும் இயலாமல் காலம் கழிப்பதை நாம் பார்த்திருக்கிறோம். கிராமங்களில், இப்படிவாலிபர்கள் வெளிதேசங்களில் உத்தியோகமாய்ப் போவதால் வீடுகள் குடியின்றிப்பாழடைந்துபோயிருப்பதும், அநேக கிராமங்கள் க்ஷீணதிசை அடைந்திருப்பதும் சிரமமெடுத்து விசாரிப்போர்களுக்கு நன்கு விளங்கும்.

மேற்கூறியதினால் நம்வாலிபர்கள் படிப்பில்லாமல் மிருகங்கள்மாதிரி யிருந்து நிலங்களைக்கட்டிக்கொண்டழவேண்டுமென்பது நம்நோக்கமன்று. அவர்கள் நன்குபடித்து, வியவசாயசாஸ்திரங்களைக் கற்றுணர்ந்து, கச்சேரியில் 15 ரூபாய் சம்பளத்தைப்பெற்றுக்கொண்டு கஷ்டப்படாமல், இச்சம்பளத்தைவிட அநேகமடங்குவருமானத்தை தம் நிலங்களைச் செழிப்பாக்கி விவசாயம் செய்து அடைவதுடன் தங்கள் தேஹ ஆரோக்கியத்தை அடையலாமென்பதே நம் கருத்து.

### விருத்திக்கு வழி.

தவிர நம்வாலிபர்களும், குடித்தனக்காரர்களும் விருத்திக்குவர இன்னொரு வழியுமுண்டு. அதாவது பால் தயிர் நெய் வியாபாரம். எனெனில், மற்றவர்களைவிட விவசாயிகளுக்குக் கறவைமாடுகளை வைத்துக் காப்பாற்ற அதிகமான சௌகரியங்கள் உண்டு. முதல் முதல் நிலங்களினின்று மாடுகளுக்குத்தீனி அடைவதால் அச்செலவின் குறைவு. இரண்டாவது மாடுகள்மேய நிலத்தின் ஒருபாகத்தில் கினிப்புல் என்னும் புல்லைப் பயிர்செய்வதனால் மாடுகளுக்கு பசும்புல் ஆகாரம்கிடைப்பது. தோட்டத்தில் சுற்றிலும் அகத்திச்செடி பயிர்செய்து அத்தழையை மாட்டின் உணவாக உபயோகித்தல்முதலான சௌகரியங்கள் மற்றவர்களுக்கியலா.

நல்ல தயிர் நெய் இன்னவிடம் கிடைக்கும் என்றுகிண்ணயம் ஏற்படின் அவைகளுக்குக் கிராக்கி வருதல் கஷ்டமேயில்லையென்பது எல்லோருக்கும் தெரிந்தவிஷயமே. தவிர இப்பொழுது ரயில்வே கம்பெனியாரால் மாதாந்தர டிக்கெட்டு சவுரயமாய்க் கொடுக்கப்படுவதால், கிராமங்களினின்று தினம் தினம் பட்டினங்களுக்கு தயிர், பால், நெய் அனுப்புவது மிக்கசுலபம். பட்டினங்களில் உத்தியோகஸ்தர்கள் நல்ல சுத்தமான பால்முதலியன கிடைக்காமல் கஷ்டப்படுவதால் அப்பேர்ப்பட்ட சில வீடுகளை வாடிக்கையாய் அமர்த்திக்கொண்டு வியாபாரம் செய்யின் நல்லலாபத்தை அடையலாகுமல்லவா.

ஐரோப்பாகண்டத்தில் உள்ள தேசங்களில் அநேகர் டேய்ரிபாரம் என்ற மேற்கூறிய தொழிலை அனுசரித்து தனிகர்களாயிருக்கிறார்கள். நம்தேசத்திலும் இவ்வாறு செய்து விருத்திக்குவரஹேதுவுயிருந்தும் அதை அனுபவத்தில் கொண்டுவருபவர் மிக்க சொல்பமே.

### கால்நடைச் செல்வம்.

வெகு காலங்களுக்கு முன் இந்தியாவிலேயே, எவனுக்கு மாடுகள் அதிகமாகவிருந்தனவோ அவனையே தனிகனென்றுசொல்வர். பணம் என்பதைக்குறிக்கும் இங்கிலீஷ்வார்த்தை மாடு என்பதைக்குறிக்கும் வார்த்தையினின்று வந்திருப்பதும்அதையேகுறிக்கிறது. தவிர ஸ்காட்லாண்டு தேசத்தில் ஒரு கனவானது செல்வமெல்லாம் கூடி அவரது பெருத்த ஆடு மாடுகளின் மந்தையென்றும், அம்மந்தையை, இராக்காலங்களில் காக்க அவர் வளர்த்துவரும் நாய்கள் எவ்வளவோ ஆயிரக்கணக்காயிருப்பதாயும் அக்கால்நடைகளைசம்ரக்ஷிக்க ஏற்பட்டிருக்கும் செலவும் சிப்பந்திகளும் அபாரமென்றும் கூறப்பட்டிருக்கிறது.

நிலங்களைச் செழிக்கச்செய்ய மாடு ஆடுகளின் எரு மிக்க சிலாக்கியமானபடியினாலும், நிலங்களை உழுது பயிர் செய்யவும் ஜலமிறைக்கவும் எருதுகள் வேண்டியிருப்பதாலும் விவசாயிகளின் செல்வம் அவர்களது நிலங்களன்றியில் கால்நடைகளுமென்றும், நிலங்களை வளமாக்கி, விவசாய சாஸ்திரத்தை அனுசரித்துப் பயிர் செய்து தக்க மகசூலை அடைவதுடன், கால்நடைகளின் சம்ரக்ஷணையின் அனுபவமும், அவைகளுக்கு கோமாரிமுதலான நோய்கள் வரின் அந்நோய்களை அகற்றவும் தொத்துவியாதிகளால் அந்நோய்கள் மந்தையில் பரவவொட்டாமல்

நோய்கண்ட கால்நடைகளை அப்புறப்படுத்திச் சிகிச்சைசெய்யவேண்டுமென்பதும் விவசாயிகள் கவனிக்க வேண்டிய முக்கியவிஷயம். நம்வாலிபர்களில் சிலமுள்ளவர்களில் பெரும்பாலார் சர்க்காரால் நியமித்துள்ள விவசாயகலாசாலையிலும் மாட்டுவைத்திய கலாசாலையிலும் சேர்ந்து விஷயங்களை அனுபவபூர்வமாய்க்கண்டறிந்து, தங்களது அனுபவத்தை, தங்களிட நிலம், கால்நடை இவைகளிடம் உபயோகப்படுத்துவதுடன் அறிவில்லாத குடியானவர்களுக்கும், அதைத்தெரிவிப்பதால் நம்தேசத்திற்கு உண்டாகத்தக்க நன்மை இவ்வளவென்று சொல்லமுடியாதல்லவா.

### யந்திரங்களால் வியவசாய விருத்தி.

கிராமங்களிலுள்ள குடியானவர்களில் பெரும்பாலார், தாங்கள் பரம்பரையாய்ச் செய்து வந்த மாதிரியே இப்பொழுதும் சாகுபடி செய்துவருவதை நாம் பார்க்கிறோம். அநேக விதமான விவசாய இயந்திரங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதும், அவைகளை உபயோகிப்பதால், சொல்பகாலத்தில் சாஸ்தியான வேலை சுலுவாயும் லாபமாயும் முடியும் விஷயமும் அவர்களுக்குத் தெரியாததால் அல்லவோ அவர்கள் அவ்வாறு செய்யவேண்டியிருக்கிறது. மேற்கூறிய குடியானவர்கள் சாகுபடிசெய்யும் நிலத்தின் சொந்தக்காரர்கள் தாம் நன்குபடித்திருக்கினும், தம்து நிலங்களில் மேற்படி இயந்திரங்களை உபயோகிக்கச் செய்யாமலிருப்பது, அவர்கள் படித்தும் படிக்காமலிருப்பவர்களுக்குச் சமானமென்பது யாம் சொல்லவும் வேண்டுமோ!

எனக்குத் தெரிந்த ஒரு பெரிய குடித்தனக்காரர், தன் நிலங்களில் வெகு நாளாய்க் கபிலேகட்டி ஜலம் இறைத்துப் பயிரிட்டு வந்தார். அவர் தனிகரானபடியால், எவரோசொல்லக்கேட்டு ஒரு தண்ணீர் இறைக்கும் யந்திரம் தன்தோட்டத்தில் வைத்து சென்ற இரண்டு மூன்று வருஷமாக சாகுபடி செய்து கண்ட அனுபவம், மாடுவைத்துப் பயிர்செய்ததைக்காட்டிலும் இந்த யந்திரத்தினால் தண்ணீர் இறைத்துச் சாகுபடிசெய்தது மிக்கலாபகரமானதென்பதே.

### "புதியன புகுதலில்" உதாரணம் பெரிது.

உலகத்தில் ஏதாவதொரு புதிய ஏற்பாடு ஏற்படின் சிலகாலங்கள் வரை அது பிரபலமாகாது. அவ்வேற்பாட்டில் நம்பிக்கையுள்ளவர்கள் மற்றோர் தம்மைக்கேலிசெய்து பேசினும், விடாமுயற்சியுடன் அதை அனுசரித்துவந்தால், அதனால் இருக்கும் லாபம் இன்னொருவனுக்குத் தெரியாமல் போகாது. அவனும் தான், மற்றவனை அனுசரிக்கச், கொஞ்ச நாளில் அநேகர் அப்புதிய ஏற்பாட்டை அனுசரிப்பதால் அதுவும் பழய ஏற்பாடாக மாறுமென்பது தெரியாதவர்கள் ஒருவருமிலர். இதுபோல் சாஸ்திரப்பயிற்சியில் தேறின சிலர் விடாமுயற்சியுடன் மற்றவர்கள் எதையோசொல்லிப்போகட்டுமென்று இருந்து தாங்கள் கற்றறிந்ததை அனுபவத்திற்குக்கொண்டு வருவதால் நாளாவட்டத்தில் எல்லோரும் அவரை அனுசரிப்பார்களென்பது திண்ணம்.

எம். என். கணேசய்யர்.

## *Sita—A Tale of Hindu Domestic Life.*

## சீதா, அல்லது இல்லறவாழ்க்கை.

### அதிகாரம் 30.

ராமச்சந்திரய்யர் தங்கம் இறந்தபிறகு, அவர்களுக்குக் குழந்தைகளிருந்தபடியால் ஸ்ரீனிவாசசாஸ்திரிகள்மீது இரங்கித் தான் முன்யோசித்தபடி தர்மத்துக்குக் கூட வைக்காமல் எல்லாவற்றையும் அவருக்கே தானமாகக் கொடுத்துவிட்டார். ஆனால் அந்த சொத்தையும் நிலைத்துவைத்துக் கொள்ள ஸ்ரீனிவாச சாஸ்திரிகளுக்கு அதிர்ஷ்டமில்லை. தங்கம் இறந்த விஷயம் தற்கொலையாதலால், போலீசார்கள் இதை அதிகப்படுத்தி ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் தான் அவளுடைய மரணத்திற்குக் காரணமென்று ரிபோர்டு செய்தார்கள்! அதன்மீது ஸ்ரீனிவாச சாஸ்திரிகளுக்கு வாரண்டு பிறந்து விட்டது. ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் உடனே வக்கீல்வைத்து ஜாமீன்பேரில் விடுதலை செய்யப்பட்டார். கேஸ் பலமாகநடந்தது. ஆனால் தங்கத்தின் கடிதத்தை ஸ்ரீனிவாசசாஸ்திரிகள் கொண்டுபோய்க் காட்டியதாலும் சாக்ஷிகளெல்லாம் அந்தக்கடிதம் தங்கத்தின் அறையில் அவளிறந்த சமயத்திலேயே எடுக்கப்பட்டனவென்றும் ருசுசெய்ததாலும் ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் விடுதலை செய்யப்பட்டார். ஆனால் சிலவு 4000 ரூ. வரையில் ஆகிவிட்டது. ஸ்ரீனிவாசசாஸ்திரிகள் வீடுவாங்கிக் கொண்டு சுகமாயிருக்கலாமென்று யோஜித்துவந்ததற்கு இதுதான் பிரயோஜனமாச்சுது இது போத

மல் ஸ்ரீனிவாச சாஸ்திரிகளுடைய சொத்தை அழிக்க வேறு ஒரு சமாச்சாரமும் சேர்ந்தது. சீதாராமன் பெண்சாதிக்குச் சோதிரர்கள் இல்லையென்றும் நாராயணசாஸ்திரிகள் அதைக்கண்டு தான் அந்த இடத்தில் கலியாணம் செய்தாரென்றும் நாம் முன்னமேயே சொல்லியிருக்கிறோம். அந்தப்பெண் பணக்கார இடத்திலிருந்து வந்தும் வெங்கலக்ஷ்மி யம்மாளுக்கு அவள் லட்சியமாகவிருக்கவில்லை. வெங்கலக்ஷ்மியம்மாள் தங்கத்தை நன்றாய் நாம்வைத்திருந்ததற்கு என்னபலனைக் கண்டோமென்று எண்ணி, சீதாராமன் பெண்சாதி சுப்பலக்ஷ்மியை வெகு கொடுமையாய் நடத்திவந்தாள். அந்தப் பெண்ணும் மிகவும் சாது; வீட்டுக்காரியம் சரிவரப்பார்க்கவும் தெரியாது. சாதுர்யமாய்ப் பேசவும் தெரியாது. தங்கம் தன் சாமர்த்தியத்தால் ஸ்ரீனிவாசசாஸ்திரிகளைமயக்கி அவர் தான் சொன்னபடி கேட்கும்படி வைத்திருந்தாள். ஆனால் அந்த சாமர்த்தியம் சுப்பலக்ஷ்மிக்கு இல்லை. தன்புருஷனைத் தன்வசப்படுத்த முடியாததால், சீதாராம சாஸ்திரி வெங்கலக்ஷ்மியம்மாள் பக்ஷம் சேர்ந்து கொண்டார். வெங்கலக்ஷ்மியம்மாள் இந்தப் பெண்ணுக்குச் சோறுகூட சரியாகப் போடுகிறதில்லை. ஆனால், சீதாராம சாஸ்திரியிடம் தோஷமெல்லாம் அந்தப்பெண்மீதே போட்டு, கோள்சொல்லி விடுவாள். சீதாராமசாஸ்திரி அதைக் கேட்டுக்கொண்டு அப்பெண்ணை மொத்து மொத்தென்று அடிப்பார். பாவம் அந்தப்பெண் என்னசெய்யும்! அழுதுக்கொண்டேயிருப்பாளேயல்லாது தன் மாமியார்மீது பிசகென்று சொல்லமாட்டாள். இப்படி சீதாமராசாஸ்திரி இடங்கொடுக்க வெங்கலக்ஷ்மி யம்மாளுக்குத் தைரியம் அதிகமாய்விட்டது. கொஞ்சநாளில் தானும் சுப்பலக்ஷ்மியை அடிக்க ஆரம்பித்தாள். பிறகு, கொஞ்சநாளைக்கெல்லாம் சுப்பலக்ஷ்மி புருஷனுடன் படுத்துக்கொள்கிறது கூட அவளுக்குப் பொறுக்கவில்லை; எங்கசீதாராமன் குஞ்சலமாட்டமா இருக்கஅவனுக்கு இந்த நாசக்காலியை எங்கேதான் வைத்திருந்ததோ என்பாள். எதாவது தோஷத்தை அவள்மீது எற்படுத்திசீதாராமனிடம் அவள் போகாமலிருக்கும்பொருட்டுவாசல்படியில்படுத்துக்கொண்டு சுப்பலட்சுமியை வெளியில் படுத்துக்கொள்ளச் சொல்வாள். இப்படி இருவருக்கும் வெறுப்பை உண்டாக்கி வைத்து வெங்கலட்மியம்மாள் சீதாராமனுக்கு ஓர் தேவடியாளைத் தீர்மானம் செய்துகொடுத்தாள். பிள்ளை தெரியாத்தனமாக அப்படி நடந்துகொண்ட போதிலும் தாய் அவனுக்குப் புத்திசொல்லி சீர்திருத்தவேண்டியிருக்க, தானே தேவடியாள் வைத்துக் கொடுக்கும் தாயின் எண்ணம் எவ்வளவு கெட்ட எண்ணமாயிருக்கவேண்டும். சீதாராம சாஸ்திரிக்குத் தெவடியாளுடைய சிநேகம் அதிகமாக சுப்பலட்சுமியை முற்றிலும் மறந்துவிட்டான். சுப்பலட்சுமிக்கு சீதாராம சாஸ்திரியை ஒருநாளாவது தனியாய்க்கண்டு தன் சங்கதிகளை சொல்லிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம். ஆனால் வெங்கலட்சுமி அம்மாள் அதற்கு இடம் குடுக்கவில்லை. ஒருநாள் பாதிராத்திரியில் சுப்பலட்சுமிவிழித்துக்கொண்டுபார்க்க சீதாராம சாஸ்திரிகள் அறைதிறந்து கிடந்தது. வெங்கலட்சுமி அம்மாளும் அயர்ந்து தூங்கினாள். சுப்பலட்சுமி இதுதான் சமயமென்று கண்டு மெல்ல எழுந்திருந்து உள்ளே போவதற்காக வெங்கலட்சுமி அம்மாளைத் தாண்டினாள். இவளுடைய துரதிஷ்டம் வாசப்படி தடுக்கி வெங்கலட்சுமி அம்மாள்மீது விழுந்து விட்டாள். வெங்கலட்சுமிஅம்மாள் உடனே விழித்துக்கொண்டு சீதாராமசாஸ்திரிகளை எழுப்பி அடே சீதாராமா உன் பெண்சாதி பண்ணினகாரியத்தைப் பாரடா. என்னைக்கொல்ல வழிதேடிவிட்டாள் என்றாள். சீதாராம சாஸ்திரிகள் உடனே அவளை அடி அடி யென்று அடித்தார். பிறகு வெங்கலட்சுமி அம்மாள் வம்பர் மகாஜனங்கள் சபையெல்லாம் போய் தன் நாட்டுப் பெண் தன்னைக் கொல்லநினைத்ததாகச் சொன்னாள். அவர்கள் நீதானே உன் நாட்டுப்பெண்ணுக்கும் பிள்ளைக்கும்ஆகவிடாமல்அடித்துபிள்ளைக்கு தேவடியாள் வைத்துக்கொடுத்தாய் என்றார்கள். வெங்கலட்சுமி அம்மாள் அந்தபாவி அப்படி சொன்னாளா என்று சொல்லி அன்று முதல்நாள் ராத்திரி நடந்த சங்கதிகளைச் சொன்னாள் அவர்கள் அவளுக்கு எதாவது பைத்தியம் பிடித்திருக்கவேண்டும் இல்லாவிட்டால் இப்படி இருக்கமாட்டாள் என்றார்கள். உடனே வெங்கலட்சுமி அம்மாள் தன் நாட்டுப் பெண்ணுக்கு பைத்தியமென்று ஊரில் எல்லாம் சொல்லிகொண்டு பிள்ளையினிடமும் இப்படியே சொன்னாள். சீதாராம சாஸ்திரி அதற்காகத்தகுந்த வைத்தியனைப் பார்த்து கூப்பிட்டார். அவன் சீதாராமசாஸ்திரிகள் பணத்தை எராளமாகப்பறித்துக்கொண்டு பிறகு அது பைத்தியமில்லையென்றும் பிசாசு என்றும் சொன்னான். பிறகு சீதாராமசாஸ்திரி ஓர் மாந்திரிகனை வரவழைத்தார். மாந்திரீகன் வந்துபார்த்து அதற்கு வேண்டிய பூஜைகளெல்லாம் செய்து அந்தப் பெண்ணை அஞ்சுபிசாசு

கள் பிடித்துக்கொண்டிருக்கின்றனவென்று சொன்னான். சுப்புலட்சுமிக்கு இந்தக்கூத்தையெல்லாம் பார்க்க வேடிக்கை ஒருபக்கமும் வருத்தம் ஒருபக்கமுமாய் இருந்தது. கடைசியில் தன் புருஷன் மாந்திரீகன் சுப்பலட்சுமியின் ஊரார் எல்லாரும் இருக்கும்போது சுப்புலட்சுமி மாந்திரீகனைப்பார்த்து அடே பைத்தியக்காரா போடா எனக்கு பிசாசு ஒன்றும் இல்லை என்னை பிடித்துக்கொண்டிருக்கும் பிசாசு வெங்கலட்சுமி அம்மாளைத் தவிர வேறே ஒன்றும் இல்லை என்றாள் பிறகு வெங்கலட்சுமியம்மாள் சுப்புலட்சுமியின் தாயாரை வரும்படி எழுதச் சொன்னாள். இதை எல்லாம் தெரிந்துகொண்ட சுப்புலட்சுமியின் தாயார் ஒரு தடவை வந்து சீதாராமசாஸ்திரிக்குத் தன்னால் கூடியவரையில் தனியாகப் போகும்படி உபதேசித்தாள். சீதாராம சாஸ்திரியைத் தன்வீட்டிலேயே இருக்கும்படிக்கும் கேட்டுக் கொண்டாள். சீதாராம சாஸ்திரிகள் ஒன்றுக்கும் சம்மதிக்கவில்லை. பிறகு அவர் தலைச்சனியன் என்று சொல்லிவிட்டு, வீட்டு வெங்கலட்சுமி அம்மாள் அடித்தால் கூடத் திருப்பி அடிக்கும்படி தன் பெண்ணுக்குச் சொல்லிவிட்டுப் போய்விட்டாள். சுப்புலட்சுமியை அவள்புருஷன் இவ்வளவு கொடுமையாய் நடத்தியும் அவன்மீது வெகுபிரியமாயிருந்தாள். அவ்வளவு நல்லமாதிரியான பெண்ணைக்கொடும்புலியான வெங்கலட்சுமியம்மாளும் சீதாராமசாஸ்திரிகளும் இப்படி கொடுமையாய் வைத்திருந்தார்கள். சுப்புலட்சுமி வரவர வெங்கலட்சுமியின் உபத்திரவம் பொறுக்கக் கூடாமல் கூடக் கூட பதில் சொல்ல ஆரம்பித்தாள். பிறகு கொஞ்சநாளைக்கெல்லாம் மாமியார் அடித்த அடிக்கும் திருப்பி அடிக்க ஆரம்பித்தாள். வெங்கலட்சுமி யம்மாள் பார்த்தாள்: இனி நாம் ஏதாவது அவள்மீது பெரியதோஷத்தைச் சொல்லி அவளுக்குத் தகுந்த சிக்ஷை செய்விக்க வேண்டுமென்று தீர்மானித்தாள். அடிக்கடி தன் பிள்ளையிடத்தில் சுப்பலட்சுமி அவள் ஊரில் இருந்தவரும் ஒருமனிதனை வைத்துக்கொண்டிருக்கிறதாகச் சொல்லிவந்தாள். சீதாராம சாஸ்திரிகள் அதை நம்பவில்லை நீ சொல்வது நிஜமென்று நான் நேரில் பார்த்தால் நம்புவேனென்றார். அதற்கு வெங்கலட்சுமி யம்மாள் நல்லது அந்தமனிதன் வரும் சமயம் பார்த்து உனக்குச்சொல்லி அனுப்புகிகிறேன் பார் என்றாள்: இப்படி யிருக்க ஒருநாள் சுப்புலட்சுமியின் தமக்கை துந்து என்ற ஒருவள் வந்திருந்தாள். அவள் சிலநாள் அங்கே இருந்ததில் பேச்சுவார்த்தையில் தான் சிறுவயதில் அடிக்கடி புருஷவேஷம் போட்டுக்கொள்ளுகிற வழக்கமென்றும் தன் தகப்பனாருக்குப் பிள்ளை இல்லாததால் தனக்கு அடிக்கடி அப்படிவேஷம் போட்டு ஒருநாள் இரண்டுநாள்கூட அப்படியே இருக்கச் சொல்வாரென்றும் தான் டிராமாவில் நடிப்பதுபோல் புருஷவேஷத்தில் புருஷன் போலவே நடித்து தன் தங்கைகளில் யாரையாவது பெண்சாதிபோல் பாவித்து நடிப்பதைத் தன் தகப்பனார் கண்டு வெகு சந்தோஷப் படுவாரென்றும் சொன்னாள்'. இதைக்கேட்ட வெங்கலட்சுமியம்மாள் தனக்குள் சந்தோஷப்பட்டுக்கொண்டு அவளை வெகு நன்றாய் உபசரித்து கொஞ்சநாள் இருந்துவிட்டுப்போகச் சொன்னாள். அவள் அப்படியே சம்மதிக்க வெங்கலட்சுமி அம்மாள் உடனே திஜார் சொக்காய் எல்லாம் தயார்செய்து வைத்துக் கொண்டாள். சாயங்காலவேளையில் சுப்புலட்சுமி வாய்க்கால் கரைப் பக்கத்தில் இருக்கும்போது வெங்கலட்சுமி அம்மாள் கெஞ்சுவை புருஷவேஷம் போட்டுக்கொண்டு சுப்பலட்சுமி இடம் அவள் புருஷன்போல் நடிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டாள் அவள் அப்படி சம்மதித்து வேஷம் போட்டுக் கொண்டு தன் தங்கையிடம்போனாள். வெங்கலட்சுமி அம்மாள் இது தான் சமயமென்று கண்டு தன் பிள்ளை சீதாராம சாஸ்திரியைக் கூப்பிட்டு நான் சொல்வது பொய் யென்றாயே அதோபார் அவர் இருவரும் கொஞ்சிக் குலாவுவதைப்பார் என்றாள். சீதாராமசாஸ்திரி பார்த்த சமயத்தில் அவர்கள் இருவரும் தோளில்மீது கைபோட்டுக் கட்டிக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள். சீதாராம சாஸ்திரிக்கு வேறே சாக்ஷி இதை விட என்னவேண்டும்,. அப்படியே ஓடிப்போய் அந்த மனிதனை வெட்டிவிடலாமா என்று யோசித்துப் பார்த்தார் பிறகு அவனைக்கொல்வதில் என்ன பிரயோஜனம் இவள் சம்மதித்ததாலல்லவோ அவன் வந்தான். இருக்கட்டும் இவளை சித்திரவதைசெய்யாமல் விடக்கூடாது என்று தீர்மானித்தார். சீதாராம சாஸ்திரி அவளைக் கொல்லுகிற விதத்தைப் பலவிதமாகயோஜித்தும் ஒன்றும் சரிப்படாமல் கடைசியில் ஓர்கொழுவை காயவைத்து அவள் கண்ணில் இழுத்துவிடுவதாகத்தீர்மானம் செய்தான். ஒருநாள் இரவு சுப்பலட்சுமியிடம் கொழுவை நன்றாய் சிகப்பாய் இருக்கும்படி காயவைத்து அதை ஒளித்துக்கொண்டு சீதாராம சாஸ்திரி தன் தாயாரைக் கூப்பிட்டபோது வரச்சொல்லி விட்டு உள்ளே போய் சுப்பலட்சுமி

யிடம் படுத்துக்கொண்டார். சுப்பலட்சுமி வெகு பிரியத்துடன் சீதாராம சாஸ்திரிகளைக் கட்டிக்கொண்டு ஏது உங்களுக்கு என்மீது இவ்வளவு பிரியம் வந்தது என்றாள். சீதாராமசாஸ்திரி அதை ஒன்றையும் லட்சியம் செய்யாமல் அவள் கையை மெள்ள அப்புறம் எடுத்துவைத்தார். ஆகா சுப்பலட்சுமிக்கு அவருடைய கெட்ட எண்ணம் தெரிந்ததா. ஆட்டை வெட்டத் தயார்செய்துகொண்டிருக்க வெட்டுகிற மனிதனிடத்திலேயே அது கொஞ்சி அவன் கையில் இருக்கும் பில்லை விசாரம் இல்லாமல் தின்கிறது அல்லவா! அப்படிப்போல் சுப்பலட்சுமி சீதாராம சாஸ்திரியின் கெட்ட எண்ணம் தெரியாமல் அவருடன் கொஞ்ச ஆரம்பித்தாள். பிறகு சீதாராம சாஸ்திரிகையையை அப்புறம் எடுத்துவைக்கவும்சுப்பலட்சுமிவருந்தப்பட்டுக்கொண்டு என்னஉங்களுக்கு உடம்பு என்ன ஏதோ ஒரு மாதிரியாய் இருக்கிறீர்களே என்றாள். சீதாராமசாஸ்திரி ஒன்றுமில்லை தலையை வலிக்கிறது என்றார். சுப்புலட்சுமி ரொம்பவும் பரிதாபித்து எழுந்திருந்து அப்படியானால் நான் உங்கள் தலையைப் பிடித்து விடட்டுமா என்றாள். சீதாராமசாஸ்திரி நீ எனக்கு இந்த உபசாரங்களெல்லாம் செய்யவேண்டாம் உன்னைக் கட்டிக் கொஞ்சுகிறவனுக்கு இந்த உபசாரம் செய் என்றார்.

சுப்பலட்சுமி அதனால் தான் என்னைக் கட்டிக் கொஞ்சுகிறதங்களுக்கு உபசாரம் செய்கிறேனென்றாள். சீதாராமசாஸ்திரி அதற்கு பாத்திரன் நானல்ல. மற்றவர்கள் இருக்கிறார்கள்.

சுப்பலட்சுமி:—அய்யோ நீங்கள் என்ன இப்படிப் பேசுகிறீர்களே! நானுங்களுக்கு என்ன அபராதம் செய்தேன் சொல்லுங்கள்.

சீதாராமசாஸ்திரி:—இதைவிட நீ என்ன அபராதம் செய்யவேண்டும்.

சுப்பலட்சுமி:—அதை இன்னது என்று சொல்லுங்கள்.

சீதாராமசாஸ்திரி:—சொல்வது என்ன. இது தான் நான் சொல்லப்போகிறது என்று ஓர் பழுக்கக் காச்சின இரும்புப் கொழுவை எடுத்தார். சுப்பலட்சுமிநடுநடுங்கிப்போய் ஐயோ இது எதற்கு என்றாள்.

சீதாராமசாஸ்திரி:—நீ உன் ஊரானிடம் சுகபட்டதற்குப் பிரயோசனம் இதுதான். இதை உன் கண்ணில் வைக்கப்போகிறேன்.

சுப்பலட்சுமி:—தங்களுக்கு இதைஎன்கண்ணில் வைக்கமனம்வருமா. உங்கள் கண்ணில் ஒரு தூசிபட்டால் அது எவ்வளவு உருத்துகிறது. அப்படி இருக்க ஒரு பழுக்கக்காயவைத்த கொழுவை என் கண்ணில் இழுக்கிறேனென்கிறீர்களே இது தர்மமா.

சீதாராமசாஸ்திரி;—நான் வைக்கத் தடைஎன்ன உன் காரியத்தைவிட என்காரியம் பெரிததல்ல.

சுப்பலட்சுமி:—என் துரையே என் மீதுவீணில் இப்படி சந்தேகப்படலாமா. நீங்கள் சொல்வது நிஜமானால் என்னைச் சித்திரவதை செய்யுங்கள்; இதோ பாருங்கள் நீங்கள் செய்யப்போகிற காரியத்தைப் பார்த்து அவமானத்தால் அந்த கொழுவுக்குக் கூட முகம் வெளுத்துபோய்விட்டது பாருங்கள் (கொழுவுக்குச் சூடுபோய் சாம்பல் தெரிந்தது).

சீதாராமசாஸ்திரி:-இதோ அதை ஊதிவிட்டால் மறுபடியும் செகப்பாகிறது;நான் உன்னைவிட்டேனா.

சுப்பலட்சுமி:—நீங்கள் அப்படி ஊதினால் கெட்ட காரியத்தைக் கண்டு கோபத்தால் அக்கொழு முகங்கூட சிவந்து போகும். அய்யோ இந்த புத்தி யார் தங்களுக்குச் சொல்லிக் கொடுத்தார்கள்.

சீதாராமசாஸ்திரி:—வாயை மூடிக்கொள்ளுகிறாயா என்ன.

சுப்பலட்சுமி:—அய்யோ என் நாக்கு இருக்கிற வரையில் நான் எப்படி நீங்கள் செய்கிற இந்த குரூரமான காரியத்துக்குப் பேசாமல் இருக்கக்கூடும். வேண்டுமானால் முன்னாடி என் நாக்கை அறுத்து விடுங்கள். அய்யோ என் கண்ணிற்குப் பதிலாக என் நாக்கையாவது அறுத்துவிடக் கூடாதா.

சீதாராமசாஸ்திரி:— நீசெய்த குற்றத்திற்கு முதல் முதல் கண்ணைத்தான் எடுக்கவேண்டும்.

சுப்பலட்சுமி:—நான் ஒரு குற்றமும் அறியேனே. ஒரு கண்ணில்வலிவந்தால் உங்கள் கண் உங்களை எவ்வளவு கஷ்டப்படுத்துகிறது. போனவாரத்தில்நீங்கள் அப்படி கண்வலியால் கஷ்டப்படும்போது நான்என்

பட்டைப் போட்டு உங்கள் கண்ணை ஒத்தவில்லையா. என்னுடைய விலைஉயர்ந்த பட்டைப் பட்டென்று பாராமல் தங்கள் கண்ணுக்கு உபயோகப்படுத்தினேனே. என்பேரில் இந்தக் குற்றத்தைமட்டும்சுமத்தாமல் சித்திரவதை வேண்டுமானாலும் செய்யுங்கள். என் கண்ணை மட்டும் ஒன்றும் செய்யாமல் விட்டுவிடுங்கள். என் கண்கள் வேறொன்றுக்கும் இல்லாவிட்டாலும் உங்களைப் பார்ப்பதற்காவது இருக்கட்டும்.

சீதாராமசாஸ்திரி:-என்னைப் பார்க்கஉனக்குக் கண்கள் எதற்கு. உன் ஊரிலிருந்து நிஜார்போட்டு வந்தானே அவனைப் பார்ப்பதற்காக கண்வேண்டுமென்று சொல் என்றார்.

சுப்பலட்சுமி:—நிஜார் போட்டுக்கொண்டு வந்தவன் யார் என்று நினைத்துக்கொண்டீர்கள். எங்கள் துரைசாமி உங்கம்மா வேண்டுகோள் படித்தானே ஆண் வேஷம் பொட்டுக்கொண்டாள். அதைக்கண்டுநீங்கள் சந்தேகப்படுகிறீர்களா என்ன. அய்யோ நான் ஒருகுற்றமும் செய்யவில்லை. என் கண்ணைத்தவிற வேறு என் நாக்கையாவது என் கைகால்களை யாவது எடுத்துவிடுங்கள் அல்லது என் உயிரையே எடுத்து விடுங்கள். நீங்கள்பார்த்து என்னை என்னதான் செய்யக்கூடாது. என் கண்ணைமட்டும் எனக்குத் தங்களைப் பார்ப்பதற்சாவது விட்டுவிடுங்கள் என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்.

இப்படி அவள் சொல்ல சீதாராமசாஸ்திரிக்கு இதைக் கேட்கமனம் இறங்கிவிட்டது. உடனேகொழுவை கீழேபோட்டுவிட்டு நான் என் கையால் உன்னைக் கொல்லமாட்டேன். ஆனால் என் தாய் என்னை சாமாநியமாக விடமாட்டாள் உனக்கு பின்புறத்துக் கதவைத் திறந்து விடுகிறேன் நீ அதுவழியேபோய் கடைசி உள்ளில்போய் ஒண்டிக்கொள். நான் உன்னை கொன்று விட்டதாக சொல்லி விட்டுப் பிறகு உன்னை வெளியே தாட்டிவிடுகிறேனென்றார். சுப்பலட்சுமி அப்படியே சம்மதித்து பின்புறம் சென்றாள். சீதாராமசாஸ்திரி வெங்கலட்சுமி யம்மாளிடம் போய் அவள் நாட்டுப்பெண்ணை கொன்று வெகு தூரதேசத்தில் காட்டில்போட்டுவிட்டதாகச் சொன்னார். வெங்கலட்சுமிக்கு வெகுசந்தோஷம். நமக்கு சீதாராமன் தான் பிள்ளை என்று நினைத்துக்கொண்டாள். சுப்பலட்சுமி பின்புறம்போனதும் மறுபடியும் தன் மாமியார் திறந்திவந்தால் என்ன செய்கிறது அல்லது சீதாராமன் மறுபடி தாயாருக்கு உட்பட்டு பழயபடி கண்ணைக் கொளுத்தவந்தால் என்னசெய்கிறதென்று பயந்து அந்தப் புறம் இருந்த ஓர் சுவற்றில் ஏறி எப்படி இருந்தாலும் இருக்கட்டுமென்று குதித்துவிட்டாள். கீழே வெகு ஆழமாயும் ஓர் கூர்மையான பாறையும் இருந்தபடியால் சுப்பலட்சுமி அதில் விழுந்து வெகு காயப்பட்டு மூர்ச்சைபோய்க் கிடந்தாள். இதைப்பார்த்த ஒருவர் சுப்பலட்சுமியை ஆஸ்பத்திரிக்கு எடுத்துப்போய் ஒப்புவித்தார். மறுநாள் ஊர் முழுவதும் சீதாராமசாஸ்திரி வெங்கலட்சுமியம்மாள் இவர்கள் நாட்டுப்பெண்ணை செய்தகொடுமைகள் பரவிற்று. போலீஸார்எல்லாம் வந்து உடனே வெங்கலட்சுமி சீதாராமன் எல்லோரையும் கைதிகளாக்கி ஜெயிலில் அடைத்தார்கள். அந்த ஊரார் எல்லாரும் இந்தஅக்கிரமத்தைப் பார்த்துச்சகிக்கமுடியாமல் சகலசங்கதிகளையும் போலீஸாருடன் சொல்லிவிட்டார்கள். சுப்பலட்சுமியின் தாயார்வந்து தன் மகளின் நிலைமையைக்கண்டுபட்டகஷ்டம் சொல்லிமுடியாது. சுப்பலட்சுமி ஆஸ்பத்திரியிலிருந்தே இறந்து போய்விட்டாள். சுப்பலட்சுமியின் தாய்க்கு வருத்தமும் கோபமும் பொறுக்கமுடியவில்லை. வெங்கலட்சுமியம்மாளையும் சித்திரவதை செய்யவேண்டுமென்றிருந்தாள். உடனே அவள் தன்கோபத்தால் கேஸ் விஷயமாய் நன்றாய் முயற்சிசெய்ய ஆரம்பித்தாள். சீதாராமசாஸ்திரிக்கு செலவுசெய்ய பணம் ஒன்றும் இல்லை. ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் தன் சொத்தில் பாதிவரையில் செலவு செய்து பார்த்தார் ஒன்றும் பலிக்கவில்லை. வெங்கலட்சுமி யம்மாளுக்கு சுப்பலட்சுமியினால் கிடைக்கக் கூடிய சொத்துப்போனது தவிர ஒவ்வொருவருக்கும் ஒருவருஷம் கடுங்காவல் தண்டனைகிடைத்தது.

எஸ். இராமஸ்வாமி ஐயர், பி. ஏ.